# முல்லை கதைகள்

1945ல் 'முல்லை' இதழில்
வெளி வந்த கதைகள்

முல்லை பிஎல். முத்தையா

# முல்லை கதைகள்

1945இல் 'முல்லை' இதழில்
வெளிவந்த கதைகள்

தொகுத்தவர் :

முல்லை பிஎல். முத்தையா

முல்லை
பதிப்பகம்
323/10, கதிரவன் காலனி,
அண்ணா நகர் மேற்கு,
சென்னை - 600 040

# நூல் பற்றிய விவரங்கள்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | முல்லை கதைகள் |
| தொகுத்தவர் | : | முல்லை பிஎல். முத்தையா |
| மொழி | : | தமிழ் |
| வெளியீட்டு நாள் | : | செப்டம்பர் - 1998 |
| பதிப்புரிமை | : | ஆசிரியருக்கு |
| தாள் | : | 10.5 கி.கி. வெள்ளைத்தாள் |
| நூலின் அளவு | : | 18.5 செ.மீ. X 12.5 செ.மீ. |
| எழுத்து | : | 10 புள்ளி |
| பக்கங்கள் | : | 148 |
| வெளியிடுவோர் | : | முல்லை பதிப்பகம்<br>323/10, கதிரவன் காலனி<br>அண்ணா நகர் மேற்கு, சென்னை-40 |
| நூல் கட்டு | : | தாள் அட்டை |
| பொருள் | : | சிறுகதைத் தொகுப்பு |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ வெங்கடேஸ்வரா அச்சகம்<br>7/40, கிழக்கு செட்டித் தெரு,<br>பரங்கிமலை, சென்னை-16 |

விலை : ரூ. 27-00

## தமிழ்த் தென்றல்
## திரு.வி.க வாழ்த்து

'முல்லை' வரப் பெற்றேன். அதில் தமிழ்த் தாய் முல்லை நகை புரிதல் கண்டேன். 'முல்லை'யின் முயற்சியால் நம் தாய் அரியாசனம் ஏறுவாள் என்று நம்புகிறேன்.

'முல்லை' வாழ்க!

திரு. வி. க.

1945 இல் 'முல்லை' முதல் இதழில் வெளிவந்த தொகுப்பாளர் உரை.

# முல்லை கூறுகிறது

இது 'முல்லை'யின் முதல் முறுவல். தமிழ் மக்களின் புகழ் கொழிக்கும் பொங்கல் நாளில் வருகிறது. 'முல்லை' யின் மணம் தமிழின்பமே. தமிழின்பமே 'முல்லை'யின் குறிக்கோள். 'முல்லை'யில் சிறப்பாக நம் கவியரசர் அவர்களின் கவிதைகளும், அவர்களைப் பற்றிய கருத்துரைகளும் புகிழ்த்து மலர்ந்து. மணம் தரும். தமிழ் நாட்டின் தனிப்பெருங் கவியரசர் பாரதிதாசன் அவர்களின் கருத்தில் அரும்பி, அறிஞர்களின் அருந்துணையால் முகிழ்த்து, என் செயலால் மலர்ந்தது இந்த 'முல்லை!' தமிழ்ப் பெருமக்கள் முயற்சிக்குத் துணைபுரிவார்களாக. 'முல்லை'யின் ஆதரவாளர்—அன்பர்கட்கு, வணக்கம்—நன்றி. தமிழ் ஆக்கம் ஒன்றே, 'முல்லை'யின் நோக்கம். அரசியற் சூழ்ச்சி, சமயவாதம் இவற்றிற்கு இடம் இல்லை இயன்றவரை தமிழையே கையாளுவது, பொருட்செறிவும் கருத்து நயமும் இருப்பின், பிற சொற்களில் பகைமை இல்லை. எண்ணத்தில், கருத்தில், சொல்லில், செயலில் தமிழாட்சி நிலைபெறக் காணவேண்டும். கட்டுரைகள் தந்த அறிஞர்கட்கு எம் நன்றி. மிகக் குறுகிய கால அளவிற்குள் கொண்டுவரப் பெற்றது இந்த முல்லை. அடுத்த மலர் இதனினும் நறுமணத்தைத் தரும் என்பதைச் சொல்ல வேண்டுமா?

இந்த மலர் உருப்பெற்று வெளிவரப் பெரிதும் துணையாயிருந்த இருபெரும் நண்பர்களான முருகு - சுப்பிரமணியம் — கண. இராமநாதன் இருவருக்கும் நன்றி!

—முல்லை முத்தையா

தொகுப்பாளர்



'முல்லை' இதழின் ஆதரவாளர் பாரதிதாசனும்
வெளியீட்டாளர் முல்லை முத்தையாவும்

# முன்னுரை

1943-44ல் உலகம் முழுவதும் போர்மேகம் பரவியது. அப்போது பெரும்பான்மையான பொருள்கள் வெளி நாட்டிலிருந்து வரவேண்டியதாயிற்று. அவற்றில் காகிதமும் ஒன்று. அப்போது நம்நாடு சுதந்திரம் பெறவில்லை.

புது பத்திரிகை தொடங்க அரசாங்கம் அனுமதி இல்லை.

அப்போது ஏ. கே. செட்டியார் 'குமரி மலர்' மாதம் ஒரு புத்தகம் என்ற பெயரில் தொடங்கினார்.

அதைப் பார்த்ததும் 1945இல் 'முல்லை' மாதம் ஒரு புத்தகமாகத் தொடங்கினேன்.

'போஷகர்' என்ற சொல்லுக்கு 'ஆதரவாளர்' என்ற தமிழ்ச் சொல்லை பயன்படுத்தி 'முல்லை' முதல் வெளியீடு வந்தது.

முல்லை இதழுக்கு நல்ல வரவேற்பு இருந்தது. ஒவ்வொரு இதழிலும் கவிஞர் கவிதைகளைத் தேடி எடுத்துப் போட்டேன். மேலும் கவிஞர் உதிர்த்த முத்துக்கள் வெளியிடப்பட்டது.

ஓர் ஆண்டு இவ்வாறு நடந்தது அதன்பிறகு ரகுநாதனை ஆசிரியராக நியமித்து மறுமலர்ச்சி இதழாக சில இதழ்கள் வெளிவந்தது.

'முல்லை' இதழில் வெளிவந்த 10 கதைகள் இங்கே தொகுத்து வழங்கப்பட்டுள்ளன.

இதை அடுத்து 'முல்லை' கட்டுரைகளும் வெளிவர உள்ளது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

323/10, கதிரவன் காலனி
அண்ணா நகர் மேற்கு
சென்னை-600 040

முல்லை பிஎல். முத்தையா




எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு!

—பாரதிதாசன்

# முல்லை

முதல் வெளியீடு

ஆதரவாளர்.
கவியரசர் பாரதிதாசன் அவர்கள்

★

— விலை அணா நான்கு —

★

59, ப்ராட்வே-சென்னை

'முல்லை' இதழின் மேல் அட்டையும், முதல் பக்கமும்

# இந்நூலில் உள்ள கதைகள்

# நீர் குற்றவாளியா?

கோவை அ. அய்யாமுத்து

''நீர் குற்றவாளியா அல்லவா?'' என்று அழுத்தந் திருத்தமாக அவன் என்னைக் கேட்டான். அப்போது எனக்கு ஆண்டுகள் ஐம்பது நிறைந்திருந்தன. அவனோ இருபதுக்கு மேல் ஒன்றிரண்டு கடந்த இளைஞன்.

நான் சட்டப் புத்தகங்களை யெல்லாம் கரைத்து குடித்திருந்தேன். அவனோ எழுத்தறியாதவன். நான் செல்வத்தில் திளைத்திருத்தேன். அவன் வறுமையில் முளைத்திருந்தான்.

நான் குற்றம் விசாரித்துத் தண்டிக்கும் நீதிபதியாக வீற்றிருந்தேன். அவனோ குற்றஞ்சாட்டப்பட்டு என் முன் கைதிக்கூண்டில் நின்றிருந்தான்.

அவன் சாமான்யக் குடியானவன். அவனை நான் கண்டபின் ஆண்டுகள் இருபது பறந்தோடிவிட்டன. ஆனால் அவன் என் மனக்கண் முன் இன்றும் காட்சி யளித்த வண்ணமாய் நிற்கிறான். அவன் கடாவிய சொற்கள் என்னிரு செவிகளை இன்றும் குடைந்து கொண்டிருக்கின்றன.

நான் முப்பதாண்டுகள் நீதிபதியின் இடத்தை அலங் கரித்திருக்கிறேன். மூவாயிரம் வழக்குகளை விசாரித்து நீதி செலுத்தியிருக்கிறேன். முப்பதினாயிரம் குற்றவாளி

கள் என்முன் கைகட்டி, வாய் பொத்தி நின்றிருக்கின்றார்கள். நீ குற்றவாளியா? நீ குற்றவாளி தானே? என்று அத்தனை பேர்களையும் நான் கேட்டதுண்டு. பலர் இல்லை என்பார்கள். சிலர் ஆம் என்பார்கள். அவனைத் தவிர வேறெவனும் என்மீது குற்றஞ்சாட்டி ''நீர் குற்றவாளியா - அல்லவா'' என்று என்னைக் கேட்டதில்லை. உலகில் என்போன்று லட்சக்கணக்கான நீதிபதிகள் இருந்திருக்கிறார்கள், இன்றும் இருக்கிறார்கள். கோடிக்கணக்கான குற்றவாளிகளை அவர்கள் விசாரித்திருப்பார்கள். ஆனால் எனக்கேற்பட்ட அநுபவம் அவர்களில் ஒருவருக்கேனும் ஏற்பட்டிராது.

நீண்டு கருத்த முடியை அவன் வாரிக்கட்டியிருந்தான். கட்டிலடங்காத சில ரோமங்கள் காற்றில் அசைந்து கொண்டிருந்தன. ஆனால் அவன் அசையாது நின்றிருந்தான். அவன் நெற்றி அகன்றிருந்தது. புருவங்கள் அடர்ந்திருந்தன. ஒளி நிறைந்த இரு கண்களால் அவன் இமை கொட்டாது என் முகத்தைப் பார்த்தான். அவனுடைய உயர்ந்த தோள்களையும் அகன்ற மார்பையும் என்னால் மறக்கமுடியவில்லை. அவன் உடலில் சட்டை அணியாமலிருந்தான். அவன் மனதிலும், அவன் என்னையோ, அன்று கச்சேரி முழுதும் குழுமியிருந்த ஜனத்திரளையோ சட்டைசெய்ததாகத் தெரியவில்லை.

302 வது பிரிவின்படி நீ கொலை செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறாய். நீ குற்றவாளியா அல்லவா என்று நான் கேட்டேன்.

நான் கேட்டதுதான் தாமதம். அவன் தோளை அசைத்து, மார்பை உயர்த்தி, விரிந்த கண்களோடு என்னைப் பார்த்தான். அவனது மீசைகளிரண்டும் துள்ளிக் கூத்தாடின.

அவன் கூறியதைக் கேளுங்கள் :

"நான் கருப்பகவுண்டனைக் கொலை செய்தேன் என்பது உண்மைதான். ஆனால் நான் குற்றவாளியாக மாட்டேன். பத்துப் படிகாட்டை நான் எருவிட்டு உழுது, விதைத்து, கவலை இறைத்து, களைகளைப் பிடுங்கிக் காத்து, வளர்த்து, அறுத்து அடித்துச் சேர்த்துக் குவித்தவுடன் கருப்பகவுண்டன் எமகிங்கரன்போல் வந்து நிற்பான். ஆண்டுதோறும் அவனுக்கு நான் ஐநூறு ரூபாய் கொடுத்தாகவேண்டும். நான் உழுதுவந்த காடு அவனுக்குச் சொந்தமாம். எனக்கு முன் என் தந்தை அக் காட்டை உழுது வந்தான். என் தந்தைக்கு முன் என் பாட்டன் முப்பாட்டன் ஆகியோர் அதை உழுதுவந்திருக் கிறார்கள். எனவே தலைமுறை தலைமுறையாக நானும் என் மூதாதையரும் உழைத்து உழைத்து கருப்பக் கவுண்டனுக்கு ஆண்டுதோறும் ரூபாய் ஐநூறு செலுத்தி வந்திருக்கிறோம்."

என் தந்தை எனக்கு வைத்துவிட்டுப்போன சொத்து எனது உடலும், கருப்பக் கவுண்டன் சொந்தங்கொண் டாடும் பத்துப்படி காடும்தான். என் தந்தை இறந்த மறு தினமே அவர் வைத்துழைத்த எருதுகளிரண்டும் எமபுரம் சேர்ந்தன. நான் கருப்ப கவுண்டரை அணுகிக் காளை கள் இரண்டு தந்துதவுமாறுகேட்டேன். அவன் கடுங் கோபத்தோடு என்னைப்பார்த்தான். "காட்டைக் காலி செய்து விட்டுப்போடா" என்று அடைமொழிகள் பலவோடு அலங்கரித்துக் கூறினான்.

கிணறுவெட்டப் பூதம் புறப்பட்ட கதை போலானது என்று நான் மௌனமாக என் மனைவியிடம் சென்று தெரிவித்தேன். அவள் பத்தினி. தன் கழுத்திலிருந்த மாங்கல்யச்சரடு நீங்கலாக, மற்ற நகைகளையெல்லாம் கழட்டி என் கையில் கொடுத்தாள். அவளுக்கு நான் என் முகநகை தவிர வேறு எந்நகையும் பூட்டியதில்லை.

எல்லாம் அவளுடைய அப்பன் பூட்டியவை. அவ்வணி களை வாங்க என் மனம் மறுத்தது. கைகள் கூசின. ஆனால் அவள் அவற்றை வற்புறுத்திக் கொடுத்தாள். அவற்றை விற்று இரண்டு காளைகள் வாங்கினேன்.

சென்ற ஆண்டு வானம் பொய்த்தது. கிணற்றில் தண்ணீர் வற்றிப் போய்விட்டது. என்னால் இயன்ற அளவு சுரண்டிச் சுரண்டிப் பாய்ச்சியும், பயிர்கள் பிழைக்கவில்லை. எல்லாம் கரிந்துபோயின. என் அருமைக் காளைகட்கும் தீவனம் தட்டிற்று.

இந்நிலையில் கருப்பக் கவுண்டர் வந்தார். காட்டுக் குத்தகை கேட்டார். அடுத்தபோகம் விளையட்டும், தரு கிறேன் என்றேன். அவர் இணங்கவில்லை. கடுகடுத்துக் கண்டபடி பேசினார். என் மனைவி மானமுள்ளவள். தன் கழுத்திலிருந்த தாலிச் சரட்டைக் கழட்டி என் கையில் வைத்தாள். அது தங்கச் சரடு.

''இதை விற்று, இவர் கடனை முதலில் கட்டுங்கள் என்றாள்.'' கடைக்காரச் செட்டி அதனை எடையிட்டு மதித்து இருநூறு ரூபாய்கள் கொடுத்தான் அப்பணத்தை அப்படியே கருப்பகவுண்டனிடம் சேர்ப்பித்தேன்.

பணத்தை எண்ணி எடுத்துக்கொண்டு பாக்கிப்பணம் எங்கே என்றான். பொறுத்துக்கொள்ளுங்கள் விளைந்த வுடன் தருகிறேன் என்றேன்.

''விளையாவிட்டாலோ'' என்று வேட்டு எழுப்பி னான். என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் திகைத்து நின்றேன்.

''யாரடா அங்கே'' என்று அதட்டினான். அவனு டைய கையாள் ஒருவன் வந்தான். இவன் காளைகளைச் சென்று பிடித்துவா என்று கட்டளையிட்டான். என் காளைகளிரண்டும் பிடித்துவரப்பட்டன.

''அவற்றை அங்கே மைதானத்தில் கட்டடா'' என்று கர்ஜித்தான் கவுண்டன். ஐயோ பாவம், வெய்யில் மண்டை வெடிக்கிறது, மரத்தடியிலாவது கட்டச் சொல்லுங்கள் என்றேன்.

''முடியாது - காளைகள்மீது கருசணையிருந்தால் (கருணையிருந்தால்) என் கடனைக் கொடுத்துவிட்டு, உன் காளைகளைப் பிடித்துப்போ'' என்று பதில் கூறினான்.

காளைகள் கட்டப்பட்ட இடத்திலேயே நான் அன்று மாலைவரை நின்றிருந்தேன். அன்று என் மனைவி பிரசவித்த ஏழாம் நாள் என் வயிறு கடித்தது. காளைகள் வயிறும் குழிந்தது.

அவற்றிற்கேனும் கொஞ்சம் புல்லும் தண்ணீரும் கொண்டுவரச் சென்றேன். கொண்டும் வந்தேன். புல்லை உதறிப்போட்டுத் தண்ணீரையும் அருகில் வைத்தேன்.

கருப்பக்கவுண்டன் ஓடோடியும் வந்தான். தண்ணீரைக் கீழே கவிழ்த்தான். புல்லை வாரித் தூரத்தில் எறிந்தான். உன் காளைமேல் உனக்குள்ள ''கருணை'' என் பணத்தின் மேல் உனக்கு இல்லையல்லவா என்று என் முகத்தைப் பார்த்துக் கூறினான்.

நீங்கள் செய்வது நீதியல்லவே. வாயற்றவனை வதைப்பது நேர்மையல்லவே; என்று அவனோடு வாதாடினேன். அவன் என்னை வைதான். தன் வலது காலால் என் வயிற்றின்மேல் எட்டி உதைத்தான்.

நீதி இல்லையா—என்று என் ஆவி துடிக்கக் கூவினேன் கண்ணீர்விட்டு கதறினேன். கைகள் கூப்பிக் கெஞ்சினேன் கல்நெஞ்சம் படைத்த கருப்பன் இரங்கவில்லை. அவனை இரங்கச் செய்ய மற்றெவரும் அங்கு அணுக வில்லை.

அதிகாரிகள் இருப்பிடந்தேடி ஓடினேன். அஞ்சலி செய்து வணங்கினேன். அழுதேன். விழுந்தேன். புரண்டேன். புலம்பினேன் என் குறையை அவர்கள் தீர்க்கவில்லை.

மீண்டும் என் காளைகள் இருக்குமிடம் ஓடினேன். அவைகளின் கட்டை அவிழ்த்தேன். கருப்பக்கவுண்டன் ஓடிவந்து தடுத்தான். அப்புறம் நடந்ததை ஒரே வார்த்தையில் முடித்துவிடுகிறேன். அவன் பிணமாக வீழ்ந்தான். நான் கப்பீரத்தோடு என் காளைகளைப் பிடித்துக் கொண்டு என் குடிசைக்கு வந்தேன்.

ஆண்டவன் படைத்தது இவ்வுலகம்; நான் உழுதுவந்த பத்துப்படி காடும் ஆண்டவனால் படைக்கப்பட்டது. அதில் உழைப்போனாகிய எனக்கில்லாத சொந்தம் கருப்பக்கவுண்டனுக் கெப்படி வந்தது?

என் உழைப்பை அவன் திருடினான். நீங்கள் அவனைத் தண்டனைக்கு உள்ளாக்கவில்லை. என்னையும் என் மூதாதையர்களையும் அவனும் அவனது மூதாதையரும் இம்சித்து, வஞ்சித்துப் பணம் பிடுங்கி வந்தனர். நீங்கள் அதனைத்தடுத்து நிறுத்தவில்லை. இறுதியில் நான் அவனைக் கொலை செய்யும் நிலைமை ஏற்பட்டதற்கு நீங்களும், உங்கள் பொய்யான சட்டமும் அதிகாரமும் காரணங்களாய் நின்றன.

இந்நிலையில் நீங்களதான் குற்றவாளியென நான் உங்கள்மீது குற்றம் சாட்டுகிறேன். நீங்கள் குற்றவாளியா-அல்லவா, சொல்லுங்கள்!

அவன் கூறிய காரணங்களையும், என்மீது சாட்டிய குற்றத்தையும் என்னால் மறுக்கமுடியவில்லை. எல்லோரும் உழைத்து உண்ணவேண்டும் என்பதே ஆண்டவனின் சட்டம். ஆனால் அச்சட்டத்தை நிறைவேற்ற நான் நீதிபதியாய் அமர்ந்திருக்கவில்லையே.

## 15

மாட்சிமைதங்கிய மன்னனின் சட்டப்படி நான் அவனைக் கழுவிலேற்றிக் கொல்லும்படி தீர்ப்புக் கூறினேன்.

தீர்ப்பெழுதிய பேனாவைத் தீயிலிட்டுக் கொளுத்தினேன். அதைத் தொட்டெழுதிட என் விரல்களைத் தண்ணீர் விட்டுக் கழுவினேன்.

ஆனால் என் மனதைக் கழுவ என்னால் முடியவில்லை. அவன் என் மீது சாட்டிய குற்றம் உண்மையே என்று என்மனம் கூறுகிறது.

# புரட்சி மனப்பான்மை

புதுமைப்பித்தன்

அன்று என் நண்பரின் பத்திரிகை ஆபீஸிற்குப் போயிருந்தேன். அங்கே ஓர் புரட்சிக்காரர், — அசல், 'அப்படமானவர்' கொஞ்சம் கூட கலப்புக் கிடையாது... நண்பருடன் பேசிக்கொண்டிருந்தார். அவர் மாஜி— ஏதோ ஓர்—சதிக்கைதி.

என் நண்பர் என்னை அவருக்கு அறிமுகம் செய்து வைத்தார். 'நம் போன்றவர்கள் எல்லாரும் தெரிந்து கொள்ள வேண்டியவராக்கும்' என்றார் என் நண்பர். புரட்சிக்காரர், 'ஓய்—உமக்கு — வெள்ளையனைச் சுடத் தெரியுமாங்காணும்' என்ற ஒரு பார்வை பார்த்தார்:

சரி, இதுதான் ஸ்ரீமான் புரட்சியா என்று நிர்ண யித்துக்கொண்டு நாற்காலியில் உட்கார்ந்தேன். புரட்சிக் காரர் அணியவேண்டிய அசல் விதேசிச்சரக்கு, யாரையும் எடுத்தெரிந்து பேசும் தன்மை......சர்வ லக்ஷணமும் பொருந்தியிருந்தது. சாட்சாத் புரட்சிக்காரர் தரிசனத் திற்காக, என் முன்னோர்கள் வழிபட்டுவந்த கடவுளை நான் கும்பிட்டுக் கொண்டேன்.

பாட்லிவாலா, பண்டார சன்னிதி, கங்காரு, 1939 மாடல் மோட்டார் கார், இரட்டைப் பெண்கள், சினிமா ஸ்டார் காந்தாமணிபாய், உயர்திரு. தேசபக்தர்.

இத்தியாதி இத்தியாதி ரகத்தைப்பார்க்க மனுஷருக்கு சுபாவமாக உள்ள ஆசையை என் விஷயத்தில் திருத்தி செய்து வைத்த அந்த ஸ்ரீமான் இன்குவிலாப் ஜிந்தாபாத்துக்கு என் மனமார்ந்த வந்தனம்.

என் நண்பரும் சிறை சென்ற தேச பக்தர். கார்ல் மார்க்ஸ் பாராயணமும் கொஞ்சம் உண்டு. சுருங்கச் சொல்லுகிறேன்—வெகு தீவிரம்.

குசலப் பிரச்னகளுடன், பரஸ்பர போலீஸ் காவல், சிறையில் கசையடி, இடைமறிக்கப்பட்ட கடிதங்கள், சமீபத்தில் வெளியான விக்டர் கோலான்சின் தீவிரவாத கிரந்தம்—எங்க அதிகாரிகள் கண்ணில் பிஸ்கோத்து டின் மாதிரி இந்தியாவுக்குள் நுழைந்தது. எல்லாம் சேர்த்து அந்தச் சமயத்தில் ஸ்ரீமான் எழுத்தாளரைச் சென்ற வருஷத்துப் பஞ்சாங்கமாக, அதாவது சமயா சமயங்களில் திருப்பிப் பார்க்கவேண்டிய விஷயமாக ஆக்கியது

வேண்டாத இடங்களில், வெற்றிலை பாக்கு—புகையிலை என்ற அழுத்தமான வாய்ப்பூட்டை—(144 உத்திரவைவிடக் கடுமையானது)பிரயோகித்துக் கொள்ள எனக்குத் தெரியும் என்பது அவருக்குத் தெரியாது......

எனது நண்பரை, இப்படிப் புரட்சி சக்தி அமுக்கி விடும் என் நான் எதிர்பார்க்கவில்லை. லாட்டியடி முதல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கோபம்வரை, தாலுக்கா டிவிஷன்களில் ஏற்றுத் தாங்கியவர். அவர் தாலுக்கா பிராந்தியம் என்று நான் விசேஷமாகக் குறிப்பிடுவதின் காரணம், அங்குள்ள மலையாளத் துரிசேர்வ் போலீஸ் காரர்கள் சட்டத்தையும் ஒழுங்கையும் தங்கள் சொந்தப் பாங்கியிலிருக்கும் கரண்ட்—டிபாசிட்டாகக் கருதி அதில் அத்துமீறித் தலையிடுகிறவர்களைத் தங்கள் சொந்தக் கேஸ் ஆவேசத்துக்கு ஆளாக்குகின்றனர். பட்டணத்துப் போலீஸ்காரன் என்றால் கொஞ்சம் தாராள புத்தியுண்டு.

இப்படியெல்லாம் அனுபவமுள்ள ஒரு மனிதன், சர்வ சூன்யமாகத் தன்னை இகழ்ந்து கொள்ளுவார் என்று நான் நினைக்கவேயில்லை.

வெற்றிலையின் நரம்பைக்கீறி எறிந்தேன். அது 'பினாமி' (காரமில்லாத மெட்ராஸ்) வெற்றிலை. வெறுப்புடன் சுண்ணாம்பைத் தடவினேன். சுவரில் சுரண்டியெடுத்தது போல, உருண்டு உருண்டு வெற்றிலையை ஒட்டைபோட்டது, இந்த சம்பிரமத்தில் களிப்பாக்கு. அதற்கு மேலாக முகப்பவுடர், செண்டு இவைகளில் நம்பிக்கை வைத்து ஆட்களை மயக்கிவரும் விபசாரிக்கு உதாரணம் போன்ற புகையிலை.

இவை போதாதென்பது போல, ஸ்ரீமான் வெங்குராவைத் தெரியுமா, கவர்னர் ஸ்பெஷல் வெடிகுண்டு வழக்குக் கைதி; பெல்லாரி ஜெயிலிலே, தனி வார்டில் போட்டு அடித்தார்களே. ஓகோ, அப்பொழுது உங்களை திருச்சி ஜெயிலுக்கு மாற்றிவிட்டார்களோ,—வீரன்னா வீரன் தான் சார்—என்ன வேலைகளெல்லாம் பண்ணியிருக்கான் தெரியுமோ......'

அவரைப் பார்க்க உங்களுக்கு அரிய சந்தர்ப்பம் கிடைத்திருக்குமே? பாவிப்பயல்கள் என்னை மாத்திப் போட்டானே!, என்று பரிதவித்தார் புரட்சி மோகன லாகிரியில் சிக்கிய என் நண்பர்......

மூவ்மெண்ட் டயம்லே என்ன செய்தார் தெரியுமா... செப்டம்பர் நடுராத்திரி ரூம்லே டார்ச்கூட இல்லை'... வெளியிலே சடபுட என்று கதவு தட்ற சப்தம் கேட்டது,— என்ன செய்தார் தெரியுமா?' என்று ஒரு ஆணித்தரமான கேள்வி போட்டார்... தெரியாது; அதற்கப்புறம்?'' என்றேன் நான்.

அரிச்சந்திரன் மயான காண்டத்தில் ஊன்றிக் கொண்டு நிற்கவேண்டிய தடி சடக்கென்று ஒடிந்து

விட்டால் எப்படியிருக்கும்? —'பின்—அரிச்சந்திரன், அந்த சமயத்தியல் சோகம் குலைய மிருதங்கக்காரனைப் பார்த்து உறுமுவது போலிருந்தது, என் நண்பரின் பார்வை.

ஸ்ரீமான் புரட்சியின் ரசனை கொஞ்சம் கட்டை போலும்: அவர் அசல் கோதுமை சப்பாத்திதான் சார், பஞ்சாபிக்காரன் மாதிரி சாப்பிடுவார் என்றார், பாவம் ஸ்ரீமான் புரட்சி.

சரி! நேரம் சரியில்லை என்று நினைத்துக்கொண்டு, "உம்மிடம் ரெண்டு ரூபாய் கடன் வாங்கவேண்டும் என்று வந்தேன்; நாளைக்கும் வருவேன். உம்மால் என்னை ஏமாற்றமுடியாது" என்று சொல்லிக்கொண்டு வெளியேறினேன்......

உப்பங்காற்று மட்டிலும் வீசும் சமுத்திரக் கரைக்குப் போகும் பொழுதுதான் விஷமத்தனமான என் கசப்பு என்னைவிட்டு அகன்றது.

அப்பொழுது அங்கு வந்தான் ஸ்ரீ பாலு. மெஸர்ஸ் பீபரிவாலாஹுக்கும் சந்த் அண் சன்ஸ் கம்பெனியின் பல்ஜோமி குமாஸ்தா. கம்பெனியின் காப்பிக்கொட்டைக் கேஸ்களுக்கு ஆணி அடித்து விலாசம் ஒட்டுவது முதல் வரவு சிலவு கணக்குத் தயாரிப்பது, சேட்ஜி மகள் ஸோனியாவுக்கு வர்ணப்பென்சில் வாங்கிக் கொடுப்பது வரை உள்ள வேலைகள் எல்லாவற்றையும் விரக்தியுடன் செய்யும் அபேதவாதி அவன்.

என்ன சார் இப்படி உட்கார்ந்திருக்கேள்! ஹி! ஹி! போனவாரம் நீங்க எழுதின கதை ரொம்ப ஜோர் சார்,—'வாழ்க்கையின் நுணுக்கங்களை, அப்படியே எழுத் தோவியமாப் பண்ணியிருக்கேள் சார் ஹி...ஹி!' என்று அசட்டுச் சிரிப்புச் சிரித்தான். அவன் அடிக்கடி என்

கதைகளைப் படிப்பான் அதைவிட என் விமரிசனங்களைப் படிப்பான் முக்கால் வாசி என் கைச்சரக்கே என் தலை மேல் தூக்கிப்போட்டு உடைக்கப்படும்.

என்ன இருந்தாலும் புகழல்லவா சார்? யாருக்குத் தான் இழுக்க மனசுவரும். வர்ணக் கடிதாசி ஒட்டிய ஜப்பான் விளக்கு மாதிரியான சூடாத புகழ் வெளிச்சத்தில் உடம்பைக் கொஞ்சம் காயவைத்துக் கொண்டேன்.

'......' என்ற பத்திரிகையைக் குறிப்பிட்டு 'போன வருஷம் மே மாதப் பிரதியைப் பார்த்தியாளா' என்றான்.

'எதற்கு'' என்றேன்.

'அதிலே ஒரு ஆழ்ந்த உண்மையிருக்கு; பார்த்தேன் சார் நேற்று இப்படி மூர்மார்க்கெட்டுக்கும் போனேன். இதை அடுக்கி இருந்தான். அட்டைப் படமெல்லாம் கிழிஞ்சுபோச்சு; காலணாவுக்கு ரெண்டுன்னான்; ஏன் சார் நமக்கு விஷயந்தானே வேணும்; அப்படியே ஒரு ரெண்டணாக்கு ஒரு கத்தை வாங்கினேன். நம்ம வீட்டுக் காரி இருக்காளே, அவளுக்குக் காகிதக் கூடை பண்ணனும் மாம்,— அப்படியே குடுத்துடுங்கன்னு வாதாடினாள். அதிலே ரொம்ப விஷயங்களிருக்கு. படிச்சுட்டுதான் தருவேன் என்றேன்; எப்படிப் பார்த்தாலும் இந்தத் தொந்தரவுதான் சார். நல்ல கோட் சார்,—மூணு வருஷந்தான் வாங்கினது; கை ஓரத்திலேதான் கொஞ்சம் கிளிசல்—அதைக்குடுத்து ஒரு கண்ணாடி ஜாடி வாங்கிப் பிட்டாள் —என்ன பண்ணச் சொல்றேள்—என்னே?' என்று ஒரு மூச்சுப் பேசிமுடித்தான்.

நான் எப்பொழுது ஓயப்போகிறதோ என்று கேட்டுக் கொண்டே இருந்தேன்.

'ஏன் சும்மா ஒரு மாதிரி இருக்கேள்? கொஞ்சம் வெத்திலே போடுங்களேன்' என்று விதேசி டப்பி நாசுக்கு

வெற்றிலைச் செல்லத்தை என்னிடம் நீட்டிவிட்டு, நீங்கள் என்ன நினைக்கிறேள்,— எண்ணெ தேச்சுக் குளிச்சால் "உடம்புக்கு நல்லதா சார்?'' என்றான்.

'எனக்கெப்படித் தெரியும்? நான் தேச்சுக்காமே இருந்ததில்லையே'' என்றேன்.

சும்மாத்தான் கேட்டேன். அதிலே போட்டிருக்கான், எண்ணெ தேய்ச்சுண்டாக் கெடுதல்னு கெடுதல் எப்படீன்னா ஜன்னி வந்திடுமாம் பாம்பு கீம்பு கடிச்சா, விஷத்தோடே ரோஷம் (உக்கிரம்: மெட்ராஸ் வார்த்தை) ரொம்ப ஜாஸ்தியாம். இந்தக் கெடுதல்களெல்லாம் எதற்கு? அவன் ஒரு மருந்து சொல்றான், அதிலே எனக்கு அவ்வளவு நம்பிக்கையில்லை — வெலை ஜாஸ்தி— அதுமட்டுமா (காதோடு காதாக)...... சுக ஜன்னி வந்துடு மாம்! இன்னிக்கு ஒரு காரியம் செய்றதுன்னு தீர்மானம் பண்ணிப்புட்டேன். இனிமே எண்ணெயே தேச்சுக்கிறதில் லேன்னு வீட்டிலே ஏகரகளை, இன்னிக்கி என்ன கிழமை தெரியுமா—புதன்! ஒரேயாட்டா முடியாதின்னுப் புட்டேன் தலையிலேகூட எண்ணெயைக் கொண்டுவந்து வச்சுப்புட்டா; நான் திரமா உதறித்தள்ளிப்பிட்டு ஆபீஸுக்கு வந்துட்டேன்.

இன்னும் வீட்டுக்குப் போகல்லே. இப்படியே பீச்சுக்கு வந்துட்டு பூ வாங்கிக்கிண்டு போகலாம்னு வந்தேன்...

''ஏன் ஓய் உம்மவீட்டு மூலக்கிரகத்துக்கு சமாச் சாரத்தை வெளியில் போட்டு உடைக்கிறீர்?—என்ன சமரசக் கமிட்டி ஏற்படுத்தணுமா என்றேன்.'

'போமையா! உங்களைப் பார்த்ததும், ரொம்ப நாளாச்சே; வீட்டுக்கு வாருங்களேன் காபி சாப்பிட்டுப் போகலாம் என்று கூப்பிடலாம்னு வந்தேன்?' என்றான் பாலு.

''வீட்டிலே காப்பி சாப்பிடாதிருக்கட்டும்; என்கூட ஹோட்டல்லே காப்பி சாப்பிடுமே!'' என்றேன்.

'ஹூ ஹூம்! வீட்டிலே் காப்பிப் பாழாப் போச் சேன்னு கத்துவா; வாருங்கள் போகலாம் என்றான் பாலு.'

'பாலு நீ பார்த்திருக்கிறாயா என்றான்'

'புரட்சிக் கைதி!......... அவரையா, நான் எப்படிப் பார்த்திருக்க முடியும்?''

'ஆசையா! மனசு அப்படியே துடி துடிக்கிறது.'

ஆமாம் புரட்சிக்காரரா? எப்படியிருப்பார்? ரொம்பத் தீவிரமாக இருப்பாரோ?

'பார்க்கணும்னு கூட்டிண்டு போரேன்!' என்று புதிய சிஷ்யன் சேர்த்துக்கொடுக்கும் சேவையில் இறக்க முயன் றேன்.

'இல்லே; வீட்டிலே காப்பி ஆறிப்பாயிடும்? சுருக்க போவோம் வாருங்க? இல்லாட்டா ஒரே தொல்லைதான்' என்று எட்டி நடந்தான் பாலு.

இரண்டு தெய்வங்கட்கு ஒரே சமயத்தில் சிஷ்யனாகும் திண்டாட்டத்தை பாலுவுக்கு ஏற்படுத்தக்கூடாது என்று ஜீவகாருண்ய சேவையில் ஈடுபட்டேன்.

# தொண்டு செய்யும் திருக்கூட்டம்

கா. ஸ்ரீ. ஸ்ரீ.

அப்படிப் பார்க்கப்போனால் இந்த உலகமே தொண்டு செய்யும் நிலைத்தான். இந்த உலகம் எதற்காக இருக்கிறது? தொண்டுக்காக, உலகத்தில் பிராணிகள் எதற்கு வாழ்கின்றன? தொண்டு செய்வதற்காக, பிராணிகள் இல்லாவிட்டாலும் உலகம் இருக்கும்: ஆனால் தொண்டு இல்லாவிட்டால் பிராணிகள் ஒருவேளை இருந்தாலும் கூட, உலகம் இராது.

இதோ இந்த மின்சார விளக்கின் வெளிச்சத்திலே நான் எழுதுகிறேன். எனக்குத் தெரியாத எத்தனையோ பேர் சேர்ந்த ஒரு சமூகத்தின் தொண்டினால் இந்த வெளிச்சம் எனக்குக் கிடைக்கிறது. இதே மின்சார விளக்கு, திடீரென்று அணைந்து போகிறது. எங்கும் ஒரே இருட்டு! ரிப்பேர் முடிந்து மறுபடி வெளிச்சம் வர இன்னும் ஒரு மணிநேரம் பிடிக்கும். அதுவரையில் என் மனைவி விளக்கைக் கொண்டு வருகிறாள். என் கை எனக்காக இந்தக் கட்டுரையை எழுதுகிறது. இப்படியாக எனக்குச் சமூகம் தொண்டு செய்கிறது; குடும்பம் தொண்டு செய்கிறது; எனக்கு நானே தொண்டு செய்கிறேன்.

எனக்கு நானே தொண்டு செய்வது எனக்கு மிகவும் நன்றாகப் புரிகிறது அதைப் பற்றிக் கேள்வி கேட்கும் போது, "ஆம், உனக்கு நீ தொண்டு செய்கிறாய்" என்ற பதிலும் என்னுள்ளிருந்து கிடைக்கிறது. குடும்பத் தொண்டும் புரிகிறது, பிரம்மச்சாரியாக இருந்தால் ஒரு குடும்பத்துக்குத் தொண்டு செய்யலாம்; மணம் செய்து கொண்டாலோ பல குடும்பங்களுக்குச் சேவை புரியலாம்! "நான் குடும்பத்துக்குத் தொண்டு செய்கிறேனா?" என்று கேட்கும்போது, குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும், "கட்டாயம் உன் தொண்டு இல்லாவிட்டால் எங்கள் கதி என்ன?" என்கிறார். ஆனால் நான் சமூகத்துக்கு ஊழியம் செய்கிறேனா என்பது எனக்குத் தெரியவில்லை. "சமூகத்துக்கு நான் ஏதாவது தொண்டு செய்திருக்கிறேனா?" என்று நடுத்தெருவில் நின்று கொண்டு நான் கேட்கிறேன். தெருவில் எத்தனையோ பேர் குறுக்கும் நெடுக்கும் போகிறார்கள், வருகிறார்கள்; வண்டிகளில் அமர்ந்து ஓடுகிறார்கள். எல்லோரும் என்னைப் பார்த்துச் சிரித்து வேடிக்கை பார்ப்பவர்கள் சிலரும் இல்லாமலில்லை. ஆனால் என் கேள்விக்குப் பதில் என்ன? நான் கேள்வியை விடவில்லை, கேட்டுக்கொண்டே இருக்கிறேன்.

ஒரு பெரியவர், எங்கோ அவசரமாய்ப் போனவர், என் கேள்வியைக் கேட்டதும் சடக்கென்று, பிரேக் போட்ட வண்டிபோல நிற்கிறார். "ஐயா, சமூகத்துக்காக நீங்கள் ஒரு துரும்பைக்கூடக் கிள்ளிப் போடவில்லை. அப்படிச் செய்திருந்தால் இத்தனை பேரிலே யாராவது ஒருவர் உமக்குப் பதில் சொல்லியிருப்பார்" என்கிறார்.

"அதுதான் நீங்கள் பதில் சொல்லுகிறீர்களே!"

அவர் ஒரு கணம் திகைத்து நிற்கிறார்; உடனே சமாளித்துக் கொண்டு, "உங்களுக்கு மூளை இருக்கிறது!" என்கிறார்.

''மூளை யாருக்கு இல்லை? இதோ போகிற இத்தனை பேருக்கும் இருக்கிறது.''

''அதைப்பற்றியெல்லாம் நான் சொல்லத் தயாராக இல்லை. நான் உங்களைக் கேட்பது ஒரே கேள்வி: சமூகத்துக்குத் தொண்டு செய்ய உங்களுக்கு விருப்பமா?''

''கேட்பானேன்? சமூகம் எனக்குத் தொண்டு செய்யும் போது-செய்வதை நேரில் காணும்போது, நான் மட்டும் எப்படி அதற்குத் தொண்டு செய்யாமல் இருக்கமுடியும்? நான் ஏற்கனவே அப்படி ஏதோ செய்துகொண்டிருப்ப தாகத்தான் நினைக்கிறேன்.''

''அதுதான் தப்பு, சமூகத்தொண்டு செய்யவேண்டு மானால் அதற்குச் சில நிலையங்கள் இருக்கின்றன. அவற்றில் ஏதாவது ஒன்றில் நீங்கள் சேரவேண்டும். சமூக சேவை என்றால் அதில் எத்தனையோ விதங்கள் இருக் கின்றன. நீங்கள் எந்த விதமான ஊழியம் செய்ய விரும்பு கிறீர்கள் என்பதை முதலிலேயே தீர்மானித்துக்கொள்ள வேண்டும். இதோ எங்கள் நிலையமே ஒன்று இருக்கிறது. அதில் வேண்டுமானாலும் நீங்கள் சேரலாம். நான்தான் அதன் காரியதரிசி.'' அட! ஒரு சமூக ஸ்தாபனத்தின் காரியதரிசியா இவ்வளவு நேரம் என்னோடு பேசிக் கொண்டிருக்கிறார்! எளிதாகக் கிடைக்கும் சந்தர்ப்பமா இது?

''சரி; உங்கள் நிலையத்தில் கட்டாயம் சேருகிறேன். அதில் எந்தவிதமான தொண்டு நடக்கிறது?'' என்றேன்.

காரியதரிசி விளக்கெண்ணெய் குடித்தவர்போல முகத்தைக் கடுத்துக் கொள்கிறார். பிறகு, என்னை எப்படியாவது கடைத்தேற்றவேண்டும் என்ற பெரு நோக்கத்தோடு என் அறியாமைக்கு இரங்கியவராய், ''உங்கள் பேச்சு எனக்கு அடியோடு பிடிக்கவில்லை. முதலில் 'நம்முடைய நிலையம்' என்று நீங்கள் சொல்ல வேண்டும். என்ன தொண்டு நடக்கிறதென்பதை விவரிக்

துச் சொல்ல முடியாது. தொண்டு என்பது ஓர் ஆள் அல்ல. கோபுரம் அல்ல; மிட்டாய்க் கடை அல்ல, உங்களுக்கு வர்ணித்துச் சொல்வதற்கு! நம் நிலையத்தில் சேர்ந்து நீங்கள் ஊழியம் செய்துகொண்டே இருந்தால், போகப்போக உங்களுக்கே அந்த உருவற்ற பொருள் உருவாகும்; அதன் சுவை தெரியும். இவ்வளவுதான் உங்களுக்கு நான் சொல்ல முடியும். அதுவும் இந்த நடுத்தெருவிலே இதைவிட அதிகமாச் சொல்லவே கூடாது'' என்கிறார்.

நான் மறுநாள் அந்த நிலையத்துக்குப் போகிறேன். அதன் தொண்டர்களில் ஒருவனாகச் சேருகிறேன். காரிய தரிசி மிகவும் நல்லவரென்று தெரிகிறது. அவர் எல்லா வேலைகளையும் தாமே கவனிக்கிறார். தமது அறையி லுள்ள மேஜை நாற்காலிகளைத் தாமே துடைத்து, இடம் மாற்றி வைத்துக்கொள்கிறார். வேலைக்காரர்களை அடிக்கடி கூப்பிட்டுத் தொந்தரவுபடுத்துவதில்லை. ஒவ்வொரு பகுதிக்கும் தாமே நேரில் போய் வேலைகளை ஒழுங்குபடுத்துகிறார். ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு தனி அதிகாரி. அவரிடம் எத்தனையோ வேலையாட்கள். காரியதரிசி இந்த அதிகாரிகளிடம் அன்போடு பழகுகிறார். ஒவ்வொரு வேலையாளையும் தம்பிபோலப் பாவித்து நடத்துகிறார். ஒரு நாளைக்கு நிலையத்துக் கட்டடம் முழுவதையும் குறைந்தது ஐம்பது தடவையாவது அவர் சுற்றி வராமல் இருக்கமாட்டார். தெருக்களில் வேலை யாட்களைத் தனியே சந்தித்தால் அவர்களுடைய நலங் களைக் கேட்பார்; அவர்கள் வேலைசெய்யும் பகுதியின் அதிகாரியைப் பற்றித் துருவித் துருவித் தகவல்கள் கேட்பார்; வேலை விவரங்களையும் விசாரித்துத் தெரிந்து கொள்வார். அதிகாரிகளைச் சந்திக்கும்போதும் இப்படித் தான் ஆட்களைப்பற்றிக் கேட்பார்.

அதிகாரிகளோ தங்களைக் குட்டி அரசர்களாக மதித்து வந்தார்கள். அந்த அந்தப் பகுதிக்குள்ளே அவர்கள் இட்டது சட்டம். குறித்த வேளையில்தான் அவர்கள் வந்து வேலை செய்யவேண்டும் என்பதில்லை. ஒருவர் காலை ஐந்து மணிக்கே வந்து எட்டு மணிக்குப் போய் விடுவார்; பிறகு அன்று முழுவதும் தலைகாட்ட மாட்டார். இன்னொருவர் பத்தரை மணிக்கு, எதிரே வரும் ஆட்களையெல்லாம் மிரட்டிக்கொண்டு ஆர்ப் பாட்டமாய் வருவார். "ஏய்! மேஜையைத் துடைத்தால் இப்படியா காகிதங்களையெல்லாம் மாற்றிவைக்கிறது? நீ ஒன்றுக்கும் லாயக்கில்லை. அந்த மின்சார விசிறியைப் போடுவதற்கென்ன? மரம்போல் நிற்கிறாயே!" என்று வேலைக்காரப் பையனை மிரட்டுவார். பிறகு குமாஸ்தா வருவார், காகிதக் கட்டுகளில் கையெழுத்து வாங்க. "ஓய்? இந்த நிலையத்தில் நீங்கள் எத்தனை ஆண்டுகளாக வேலை செய்கிறீர்கள்?" என்ற கேள்வி பாயும். "பன்னிரண்டு வருஷமாக" என்று அடக்கமாகப் பதில் வரும். "ராமராயர் கம்பெனிக்கு உங்களை எத்தனை கோணி மூட்டைகளுக்கு எழுதச் சொன்னேன்?"

"இருநூறு."

"போமையா போம்! எழுநூறு என்று சொன்னேன், உங்களுக்குக் காது மந்தமென்றால் என்னை மறுபடி கேட்பதற்கென்ன?"

"மீதி ஐந்நூறு இன்று வாங்கிக்கொண்டு வரட்டுமா?"

"சே! எவ்வளவு சொன்னாலும் உங்களுக்குப் புரிகிற தில்லை. அந்த படுபாவி நேற்று விலையை உயர்த்தி விட்டான். நீங்கள் போய் என்னத்தை வாங்கிவருவது? பெரிய அசகாயசூரன் போலத்தான் பேச்செல்லாம். இங்கே வேலையில் ஒன்றையும் காணோம்.—சரி. உள்ளே போய்க் கன்னியப்பனைக் கூப்பிடுங்கள்."

கன்னியப்பன் வேலையாட்களின் தலைவன். ஏழாவது வயதில் இந்த நிலையத்துக்கு வந்தவன். இங்கே வேலை செய்து இப்போது தலை நரைத்துப் போனவன். "இவர் எம்மாம் மட்டும்! அட, இவரெ போல எத்தினியோ அதிகாரிங்களெ நானு கண்ணுலெ வெரலெ விட்டு ஆட்டிருக்கேன். இது நேத்துப் பொறந்த பிள்ளே!" என்று பேசுவான். அவன் குழைந்துகொண்டே வந்து, "என்னாங்க!" என்றான்.

"இதோ பார். எத்தனை பழகியும் உனக்குச் சிறிதும் மரியாதையே தெரியவில்லை. ஆட்களை அடக்கி வேலையை நடத்திப்போகலாம் உனக்குத்திறமை இல்லை. ஏதோ உன் ஆயுளை இங்கே கழித்து விட்டாய்; உன்னைப் போகச் சொல்லவும் எனக்கு மனமில்லை. வரவர வேலையாட்களின் போக்கு எனக்குப் பிடிக்கவில்லை. தடியெடுத்தவனெல்லாம் வேட்டைக்காரனாக இருக்கிறான். வேலையை ஒழுங்காகச் செய்வதில்லை; ஏதாவது கேட்டால், 'அங்கே அந்தச் சம்பளம் கொடுக்கறாங்க', 'அவுங்க பண்டு கொடுக்கிறாங்க'. 'அங்கே எத்தினி நாளு லீவு கிடைக்குது!' என்று ஷறாப் பேசுகிறார்கள். எல்லாம் நீ கொடுக்கும் இடந்தான்—ஓ! ஷண்முக முதலியாரா? வாங்க, வாங்க!—சரி, நீ போய் நான் சொன்ன வேலைகளைப் பார்."

ஐந்து நிமிஷங்களுக்கு அப்புறம் அந்த அதிகாரியை நாம் காணமுடியாது. மறுநாள் மறுபடி எப்பொழுது வருவாரோ! காரியதரிசி ஏதாவது கேட்டால், நிலையத்தின் வேலையாக வெளியே போயிருந்ததாகச் சொல்லுவார்.

வேறோர் அதிகாரி, பெரும்பாலும் மாலையில் வேலைக்கு வருவார். அவருடைய இரவுச் சாப்பாடு நிலையத்தின் கணக்கில்தான். இரவு பத்து மணிவரையில் இருந்துவிட்டு, வீட்டுக்குப் போவார்.

வேலையாட்கள் குறித்த நேரத்தில் வேலை செய்வார்கள். அதற்கு முன்பும் பின்பும் எப்போது கூப்பிட்டாலும் வருவார்கள். அவர்கள் ஒருவரோடு ஒருவர் பேசக்கூட ஓய்வு இராது. ஓய்வு இருந்தாலும் பேச மாட்டார்கள். அதைவிட, கொஞ்ச நேரம் வெளியே சென்று சுருட்டுக் குடிப்பதோ, காபி அருந்துவதோ அவர்களுக்கு லாபகரமாகத் தோன்றும். 'நமக்குக் கஷ்டமோ சுகமோ, இன்னொருவனுடைய பங்கு எதற்கு?' என்ற மனப்பான்மையே பெரும்பாலும் உடையவர்கள். செத்துப் போனவன்போலப் படுத்திருந்தவனை மோந்து பார்த்துக் கரடி அவனை விட்டுப்போனதாகக் கதையில் தான் படிக்கலாம். இங்கே உயிரே போய் நீட்டிக்கிடந்தாலும், எந்தக் கரடியும் எட்டிக்கூடப் பார்க்காது. அவன் அவன் வேலை அவன் அவனுக்கு! செடிகளும் மரங்களும் ஒன்றோடு ஒன்று இழைந்து வளருவது இந்த உலகத்துக்குப் புறம்பேதான். இங்கே செடி, மரம், கவிதை - ஏதும் உதவாது. இது கடுமையான வாழ்க்கை; கற்பனைக்கு இங்கே இடம் இல்லை. எவனாவது மற்றொருவனுடன் கொஞ்சம் இழைந்தால், அவனுக்கு இவன் குழி தோண்டுகிறான் என்று அர்த்தம். நான் சொல்லப்போவது உங்களுக்கு வேடிக்கையாக இருக்கலாம்; ஆயினும் இது உண்மை. ஒரு நாளைக்கு வேலைகள் அதிகமாக வந்துவிட்டன என்று வைத்துக்கொள்ளுங்கள். அன்று பல பேர்களுக்கு அடிக்கடி கக்கூசுக்குப் போகவேண்டிய வேலைகளும் வந்துவிடும். மணிக்கணக்காக அங்கே உட்கார்ந்திருப்பவர்களும் இருப்பார்கள். வேலை செய்வதற்கென்றே சிலர் உண்டு; அவர்கள்தாம் உள்ளே ஓய்வு ஒழிச்சலின்றி மடிவார்கள். அவர்களுக்கு வெளியுலகமே தெரியாது! இந்த நிலையம் தெரியும்; தங்கள் வீட்டைப் பற்றிச் சிறிதளவு தெரியும். ஏன், இந்த நிலையத்திற்கு உள்ளேகூடப் பிற பகுதிகளைப்பற்றி ஒன்றும்மே தெரியாது. இந்த ஆசாமிகள்தாம் கன்னியப்பனுக்குப் பிரியமானவர்கள்; உயிரே போன்றவர்கள். இவர்களைப் பின்னும் கசக்கி வேலை வாங்கி அவன் தன் பிரியத்தை வெளியிடுவான்.

காரியதரிசிக்கு ஊரிலுள்ள பெரிய மனிதர்களைத் தெரியும்? கார் நம்பர்கள் தெரியும், அவர்களுடைய பணத்தை நிலையத்துக்குக் கொண்டு சேர்க்கத் தெரியும். அதிகாரிகளுக்கு அந்தப் பெரிய மனிதர்களுக்குச் சலாம் போடத் தெரியும்; தமக்குக் கமிஷன் கொடுக்கவல்ல வியாபாரிகளைத் தெரியும்; நிலையத்துக்கு வேலை கொடுக்கும் வாடிக்கைக்காரர்களைத் தெரியும்; வீட்டுக்கு வேண்டிய கறிகாய்கள், நெய், தயிர், பழம் முதலியவை கொண்டு வரும் வேலையாட்களைத் தெரியும், வேலையாட்களுக்கு வேலை தெரியும்; வீட்டிலே போட்டதை ருசி பாாக்காமலே சாப்பிடத் தெரியும்; மறுநாள் சோற்றுக்கு வழி இல்லை என்றால் முணுமுணுக்கத் தெரியும்; காரசாரமாக மேலதிகாரிகளுக்கு விண்ணப்பங்கள் எழுதத் தெரிந்த சில வெளி மனிதர்களைத் தெரியும்.

நான் இப்பொழுது இந்த நிலையத்தின் தொண்டன். இந்த நிலையத்துக்கு ஒரு தனி அடையாளம் உண்டு. அதை என் சட்டையில் மாட்டிக்கொண்டுதான் நான் வெளியே போகவேண்டும். வழியில் என்னைப் பார்க்கிறவர்கள் நமக்குள்ளே, "அவர் எந்த நிலையத்லைச் சேர்ந்வர்?" என்று கேட்டுக்கொள்கிறார்கள். அவர்கள் கேள்வி எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. என்னை அவர்கள் சமூகத்தொண்டன் என்று ஏற்றுக்கொண்டதற்கு இது அறிகுறி. தனியே நான் என்ன செய்தாலும் அது வெறும் தொண்டாக இருக்கலாம்; இதுதான் சமூகத் தொண்டு. தனியே இருந்தபொழுது நான் செய்த வேலைகள் எனக்குத் தெரிந்தன; இப்போது நான் என்ன செய்கிறேன். என்பது எனக்கே தெரியவில்லை. இருந்தாலும், இதுதான் சமூகத் தொண்டு. "நான் சமூகத் தொண்டு செய்கிறேனா?" என்று இப்பொழுது நான் கேள்வி கேட்கத் தேவையே இல்லை. "அதோ ஒரு தொண்டர் போகிறார்" என்று மக்கள் சொல்லுகிறார்கள்.

இந்த நிலையத்தில் நான் நான்கு வருஷங்களாக வேலை செய்கிறேன், என் மூளை நாளுக்கு நாள் மழுங்கு கிறது புதிதாக எந்த வேலையும் கற்றுக்கொள்ளவில்லை. தெரிந்த வேலையிலும் வேகம் குறைகிறது. அதிகாரிகள் மூளைதான் என் மூளை. அவர்கள் சொல்வதைத்தான் நான் செய்யவேண்டும். நானாக ஏதாவது செய்தாலும். அது அவர்களுக்குப் பிடித்திருக்கவேண்டும்? அவர்களுக்குப் பிடிக்காவிட்டால், பிடிக்கும்படியாக மறுபடி அந்த வேலையை மாற்றவேண்டும். இந்த வேலை எனக்குப் பிடிக்கவில்லை; ஏனெனில் என்னிடம் இன்னும் கொஞ்சம் மூளை இருக்கிறது. எனவே வேறொரு நிலையத்துக்குப் போகிறேன்.

நான் எங்கே போனாலும் இந்த அவதி என்னோடு கூடவே வருகிறது அந்த நிலையத்திலும் இதே கதை மறுபடி வேறுநிலையம் இப்படி ஏழு நிலையங்களில் மாறி மாறி எழுபிறப்பிலும் தெரிந்து கொள்ள முடியாத விஷய மாகிய 'தொண்டு' என்ற விஷயத்தை நான் ஓரளவு அறிந்து கொள்கிறேன். இப்பொழுதும் நான் 'தொண்டன்' தான்.

',அப்படியானால் தொண்டு என்பது என்ன? நீங்கள் எந்த வகையான தொண்டு செய்கிறீர்கள்?'? என்று நீங்கள் கேட்கிறீர்கள்.

தொண்டு என்பது ஒரு பெரிய ரகசியம். அது ஓர் ஆள் அல்ல, கோபுரம் அல்ல, மிட்டாய்க்கடை அல்ல, உங்க ளுக்கு வர்ணித்துச் சொல்வதற்கு! அதிலும், நடுத்தெரு விலே நான் அதைப்பற்றி அதிகமாகச் சொல்லக்கூடாது. தெரிந்துகொள்ளவேண்டும் என்ற அக்கறை இருந்தால், நீங்கள் என் வீட்டுக்கு வாருங்கள்? தொண்டுசெய்யும் எங்கள் நிலைத்துக்கு வராதீர்கள்.

''வீட்டுக்கு எப்பொழுது வரலாம்?'' என்று கேட் கிறீர்களா?

அது எப்படிச் சொல்ல முடியும்? நான் ஒரு தொண்டன்; தொண்டு செய்யும் ஒரு நிலையத்தில் இருக்கிறேன். நிலையத்தின் மூளைதான் என் மூளை. நிலையம் எப்பொழுது கூப்பிட்டாலும், எதைச்செய்யச் சொன்னாலும் - அது எனக்குத் தெரிந்தாலும் சரி, தெரியாவிட்டாலும் சரி; எனக்குச் சொந்த வேலைகள் இருந்தாலும் சரி. இல்லாவிட்டாலும் சரி, நான் தயாராகக் காத்திருக்க வேண்டும். எனவே, உங்களுக்கு என்ன பதில் சொல்வது? உங்களுக்கு எப்படித் தோன்றுகிறதோ செய்யுங்கள். இதோ, ஓர் ஆள் வருகிறான், எங்கள் நிலையத்திலிருந்து. உங்களோடு அப்புறம் பேசுகிறேன்.

# இருமுகில்கள்

மொழி பெயர்ப்பு கா. ஸ்ரீ. ஸ்ரீ.

இரண்டுமே அவசரமாகப் போய்க்கொண்டிருந்தன. மேலே மோதியதும் ஒன்று மற்றொன்றைப் பார்த்தது.

அவை இருமுகில்கள்!

வெண்மேகம் மேன்மேலும் போய்க்கொண்டிருந்தது; கருமுகில் தாழத் தாழ வந்து கொண்டிருந்தது.

வெண்முகில் கருமுகிலை அசட்டையாகப் பார்த்து கணப்பொழுது கழித்து, ''எங்கேயடா புறப்பட்டாய்!'' என்று கேட்டது.

''மண்ணுலகிற்குப் போகிறேன். நீ எங்கே போகிறாய்?''

''சொர்க்கத்திற்கு?''

வெண்மேகம் ஆகாய விமானத்தைப் போல மேன் மேலும் பறக்கலாயிற்று. கருமுகில் உடைந்த ஆகாய விமானத்தைப்போல 'விர்' என்று கீழே இறங்கலாயிற்று.

வெண்முகில் பெருமிதத்தோடு பின்னாற் திரும்பிப் பார்த்தது.

அந்தக் கருமுகில்தான் எவ்வளவு அழகு! அதிலே பளிச்சென்று ஒளிவீசும் அந்த மின்னல்—அது தெய்வீகக் காட்சி!

வெண்முகில் ஏமாற்றத்தோடு தன்னைப்பார்த்துக் கொண்டது. மின்னலில் லேசான தோற்றங்கூட அதனிடம் தென்பட வில்லை.

அது ஆவலோடு மேலே பார்த்தது. விரைவிலேயே தான் விண்ணுலகில் நுழையப்போகும் மகிழ்ச்சியில், கருமுகிலிற்றோன்றிய அந்தத் தெய்வீக ஒளியை அது மறந்துவிட்டது.

சிறிது நேரத்திற்கெல்லாம் அது திரும்பிக் கீழே பார்த்தது.

கருமுகில் எங்குமே தென்படவில்லை. பூமிமட்டும் ஸ்நான அறையிலிருந்து வெளிவரும் இளம் பெண்ணைப் போல தோன்றியது.

மரங்களில் வளைந்த கொடிகள் 'கிசுகிசு' மூட்டிய குழந்தைகளைப் போல நகைத்தன. பறவைகள் மரக் கிளைகளில் உட்கார்ந்து தங்கள் உடலைச் சிலிர்த்துக் கொண்டன.

வெண்முகில் சொர்க்க வாசலுக்கே போய்ச் சேர்ந் தது. தான் உள்ளே சுலபமாகப் போய்விடலாம் என்று அது எண்ணியிருந்தது.

ஆனால் காவலாளி அதை உள்ளே நுழைய விட வில்லை.

"உள்ளே ஒரே ஓர் இடந்தான் காலியாக இருந்தது. இப்பொழுது அது நிரம்பிவிட்டது" என்று அவன் சொன்னான்.

தன் பின்னால் வந்த பல வெண்முகில்களை இந்த வெண்முகில் வழியில் பார்த்திருந்தது. அது நினைவிற்கு

வந்ததும், 'எல்லாம் நமக்குப் பின்னால் வந்தனவே தவிர, முன்னால் ஒன்றுகூட இல்லையே!' என்று அது நினைத்தது.

வெண்முகிலுக்கு ஒரே திகைப்பாக இருந்தது. ''சொர்க்கத்தில் இருந்த அந்த இடம் யாருக்குக் கிடைத்தது'' என்று அது கேட்டது.

'ஒரு கருமுகிலுக்கு!' என்று காவலாளி சொன்னான்.

'கருமுகிலுக்கா?'

''ஆம்! வெப்பத்தால் கொதித்த மண்ணுலகைக் குளிர்விப்பதற்காக அது தன் வாழ்க்கையை-தன்னிடமுள்ள அனைத்தையும்-கொடுத்து விட்டது!'' என்று ஆகாய வாணி பேசியது.

—வி. ஸ. காண்டேகர் எழுதிய 'வெண்முகில்' என்ற நாவலில் வரும் உருவகக் கதை.

# அரை மனிதன்

**எம். வி. வெங்கட்ராம்**

**''எவ்வளவுதான் மேற்கத்தி மோஸ்தருக்குள் உடம்பைத் திணித்துக் கொண்டாலும் அசல் மேற்கத்தியானுக்கு உள்ள கம்பீரமோ நேர்த்தியோ உண்டாகப் போவதில்லை...**

**''ஆனால் பிறந்துவிட்டோம். இப்படி, இந்த நிறத்துடன் இந்த நாட்டில் எப்படியாவது வாழ்ந்து முடிக்க வேண்டியதுதான். குறைந்த பட்சம் மேற்கு முறையில் எங்களை உயர்த்திக்கொள்ள முயற்சியாவது செய்யவேண்டியது பொறுப்பு, கடன்...''**

**—இந்தச் சிறுமைப் பித்து அவன் ஒருவனுக்கு மட்டுந்தானா? நம் நெஞ்சில் நாமும் கைவைத்துப் பார்க்க வேண்டாமா?**

*மிதமான குடியால் உண்டான மிதமிஞ்சிய உற்சாகத்துடன் வெளிவந்தபோது, மழை முரட்டுத்தனமாய்க் கொட்டிக் கொண்டிருந்தது. நனையாமல் காத்துக் கொள்ள நான் 'மழைக்கோட்டும்' கொண்டுவரவில்லை. எங்காவது தங்கி இரவைக் கழிக்கலாம் என்றால், துணையில்லாத் தூக்கத்தில் இனிமை ஏது? உடலையும் மூளையையும் ஒட்டிக்கொண்டிருந்த உற்சாகத்தைச் சேதமாக்காமல் அழகாக நனைந்துகொண்டே ரயில்வே ஷ்டேஷனுக்குச்*

சென்றுவிடுவதே நலம் என்று நிச்சயித்து, கால் சட்டையை முழங்கால்கள் வரை மடித்துவிட்டுக்கொண்டு புறப்பட்டேன்.

மழையில் நனைந்துகொண்டே இரவில் தனியாக நடந்து செல்லுவதிலும் இன்பம் இருக்கிறதல்லவா? அந்த இன்பத்தை 'சீட்டி' அடித்து அனுபவித்துக்கொண்டே ஸ்டேஷனுக்கு விரைந்தேன். பிளாட்பாரத்தில் நின்றது ரயில்; புறப்படுவதற்கு இன்னும் ஒன்றிரண்டு நிமிஷங்கள் தான் பாக்கி. அவசர அவசரமாய் 'செகண்ட்கிளாஸ்' டிக்கட் ஒன்று வாங்கிக்கொண்டு சேற்றை வாரி இறைக்கும் பூட்கள் கால்வாரிவிடாதபடி ஓடி...

ஒரு 'செகண்ட்கிளாஸ்' வண்டி—நாலுபேர் படுக்கலாம்—ஒரே ஒரு வெள்ளைக்காரனைத் தவிர காலியாகக் கிடந்தது; அவனும் தூங்கிக்கொண்டிருந்தான். கதவைத் தள்ளினேன்; உள்பக்கம் தாளிடப்பட்டிருந்தது. திறந்து கிடந்த ஜன்னல் வழியாக நான் உள்ளே ஏறிக் குதிக்கவும், ரயில் ஊதவும் சரியாக இருந்தது.

முதலில் என்னைக் கவனித்துக்கொண்டேன். ஈர உடைகளைப் பிழிந்தும், தொப்பியை உதறிக்கொண்டும், 'அப்பாடா,' என்று அலுத்துக்கொண்டே படுத்திருந்த ஆளைக் கவனித்தேன். அவன் அசல் வெள்ளைக்காரன்; அசல் என்றால் அசல்தான், கருப்பு மனைவிக்கும் வெள்ளைக் கணவனுக்கும் பிறக்கும் 'அரை ஜாதி' அல்ல, நேராக எங்கோ மேற்கு நாட்டிலிருந்து வந்தவன். நல்ல வெள்ளை நிறத்தை நீளமாய்ப் பரப்பி நன்றாய் உறங்கிக்கொண்டிருந்தான். வெண்மை படுக்கையில்கூட அழகாகவே இருந்தது. அதிலும் ஆச்சரியம் என்னவெனில், அவன் தன் உடுப்பைக் கழற்றவே இல்லை. கால் சட்டை (பாண்ட்), கோட், பூட்கள், நெக்டை, ஏன், மூக்குக் கண்ணாடியைக்கூட அவன் கழற்றவே இல்லை. லேசாக மேலும் கீழும் போய்வரும் மார்பு—ரயிலின் ஆட்டத்

தினால் அசையும் உடம்பு—அவனைப் பார்த்தால் ஒரு அழகான பொம்மையைப் படுக்கவைத்திருப்பது போலத் தோன்றியது.

நான் வருத்தத்துடன் நினைத்தேன்: 'எவ்வளவுதான் நாங்கள்—அதாவது, பனிக்கட்டி போன்ற நிறம் படைத்த அல்லது நிறத்துடன் படைக்கப்பட்ட நாங்கள்—எவ்வளவுதான் மேற்கு மோஸ்தருக்குள் உடம்பைத் திணித்துக்கொண்டாலும் அசல் மேற்கத்தியானுக்கு உள்ள கம்பீரமோ நேர்த்தியோ உண்டாகப் போவதில்லை. பிறவியுடன் வருபவை அவை; அவைகளை அடைபவர்கள் பாக்கியசாலிகள்!

''ஆனால், பிறந்துவிட்டோம் இப்படி, இந்த நிறத்துடன், இந்த நாட்டில். எப்படியாவது வாழ்ந்து முடிக்க வேண்டியதுதான். குறைந்த பட்சம் மேற்கு முறையில் எங்களை உயர்த்திக்கொள்ள முயற்சியாவது செய்ய வேண்டியது பொறுப்பு. கடன்...''

நான் உட்காரவேண்டும். முடிந்தால் ஈரவுடையுடனேயே கொஞ்சம் கைகால்களை நீட்டிக்கொண்டு படுக்கவாவது வேண்டும். அவன்—என் அயரும் என் மேற்கத்தித் தோழன்—ஒரு 'பெர்த்தில்' தூங்கிக் கொண்டிருந்தான்; கீழுள்ள மற்றொரு 'பெர்த்தி'லாவது படுக்கலாமா என்று பார்த்தேன்; அங்கே உடைக்காத பிராந்தி பாட்டில் ஒன்று, ஒரு காலி பாட்டில், சிகரெட் பெட்டி ஒன்று, ஒரு தீப்பெட்டி, ஒரு வாக்கிங் ஸ்டிக், எல்லாவற்றையும்விட பயப்படும்படியாக ஒரு கைத் துப்பாக்கி கிடந்தன. எல்லாவற்றையும் கீழே எடுத்து வைத்து விட்டுப் படுப்பதற்கு எனக்கு உரிமை இல்லை.

''ஒருவேளை இந்த கம்பார்ட்மென்ட் முழுவதும் இவன் ரிஸர்வ் செய்திருப்பானோ?'' என்று நினைத்தேன். அப்படியாயின் இந்த வண்டியில் ஏறியதே தப்பு.

என் தூங்கும் தோழன் விழிப்பில் சாதுவாக இருந்தால் மன்னிப்பு கோரித் தப்பிவிடலாம். அதுவும் அவனுடைய உயர்ந்த பண்பாட்டிற்கு சிஷ்யனாகத் தோற்றம் அளிக்கும் நான் மன்னிப்பு கோரினால் அவன் அளித்துக் கொஞ்சநேரம் பேசவும் செய்யலாம். ஆனால் அவன் சாதுவாக இராமல் முரடனாக இருந்தால்? கைத் துப்பாக்கி......

அதைப் பார்த்தேன்; 'சட்டம் என்றால் சட்டம்தான்' என்று நினைத்து, சொல்லி செய்யும் வெள்ளைக்காரனின் முன் கோபத்திற்குப் பாத்திரம் ஆகிவிட்டால் அவன் என்னை நாயைப்போல் சுட்டுக் கூட தள்ளலாம்.....

நான் அதற்காகப் பயந்து விடவில்லை. இன்னும் நான்கு மணி நேரத்திற்கு மேலாகும் ரயில் புனாவை அடைய. அதுவரையில் மேல் 'பெர்த்'தில் சந்தடி செய்யாமல் படுத்திருக்கலாம் என்று முடிவு கட்டி, மற்றொரு முறை அந்த அழகான வெள்ளைப் பொம்மையைப் பார்த்து பெருமூச்சு விடுத்து, மேலே ஏறி, ஈாவுடலைத் தளர்த்தினேன்.

ஈர நாய் உதறிக்கொள்வதுபோல் ரயில் இடமும் வலமும் புரண்டு நின்றது. கீழே படுத்துள்ள தோழன் விழித்துக்கொண்டு என்னைப் பார்த்துவிடக் கூடாது என்பதற்காக மூக்கைக் கையால் பிடித்துக்கொண்டு மூச்சை வெளியில் விட்டேன். வீண் கலாட்டா எதற்கு, அதுவும் ஒரு வெள்ளைக்காரனுடன் என்பதுதான் என் அடக்கத்திற்குக் காரணம்; பயம் அல்ல, இல்லவே இல்லை.

கீழே ஜன்னலிலிருந்து யாரோ கூப்பிட்டார்கள் ''ஜான்!''

படுத்திருந்தவன் பதில் அளித்தான்: ''ஓ, இருக்கிறேன்''

பிறகு கீழிருந்த ஆள் ஜன்னலுக்கு நடந்து செல்வது தெளிவாய்க் கேட்டது. சாதாரணமாகவே வெள்ளையர் நடக்கும்போது, நல்ல குதிரை மலைமீது ஓடுவதுபோல் சத்தம் கேட்கும்.

கீழே குரல்கள் பேசின; மறந்துவிட்டேன், படுத்திருந்த ஆளின் குரல் கிளாரிநெட் வாசிப்பதுபோல் 'நொய்ங்' என்றிருந்தது.

வெளிக்குரல்: "உடம்பு எப்படி இருக்கிறது?"

உள்குரல்: "நல்ல தூக்கம்."

"மார்வலி இல்லையே? அந்த டோஸ் எடுத்துக் கொண்டாயா?"

"ஓ! மார்வலி இல்லை?"

"பிராந்தி இருக்கிறதா?"

"இருக்கிறது... ஆனால் உடம்புதான் ரொம்ப கனக்கிறது; புனாவுக்குப் போக இன்னும் நாலுமணி நேரமாவது ஆகும். நான் உடம்பை லேசாக்கிக் கொள்ளட்டுமா?'

"செய். ஆனால் ஜன்னலை நன்றாக மூடிவிடு, வெளியிலிருந்து யாரும் பார்க்க முடியாதபடி."

"ஓகே!"

ரயிலின் குரல் அவர்களைப் பிரித்தது; வெளிக்குரல், "அடுத்த ஸ்டேஷனில் பார்க்கிறேன்," என்று விட்டு ஓடியது.

அந்த சம்பாஷணை எனக்கு அதிசயமாக இருந்தது. உடல் கனத்தைக் குறைக்க நண்பனின் அனுமதியை ஏன் கேட்கவேண்டும் என்று எனக்குப் புரியவில்லை; ஆடைகளைக் கழற்றுவதனால் யாரும் பார்க்காதபடியாய் ஜன்னலைக் கெட்டியாக மூடும்படி நண்பன் ஏன்

யோசனை கூறவேண்டும்? ஒருவேளை—ஒருவேளை—முழுக்க முழுக்க உடையின் கனத்தைக் குறைக்க...

சே, வெள்ளையர் காட்டு மிராண்டிகள் அல்ல, சூரியன் எப்படிக் கொதித்தாலும், அவர்கள் உடை குறைக்கமாட்டார்களே...

அவர்கள் பேசியதன் பொருள் என்னவென்று புரிய வில்லை...

ஜன்னலை—கண்ணாடி உள்பட—இறுக மூடிவிட்டு... பிறகு 'கட புட' வென்று சிறிது நேரம் கீழே ஏதேதோ சப்தம் கேட்டுக் கொண்டேயிருந்தது. நான் அசையவே இல்லை. இன்னும் சிறிது கழிந்து, கீழே மௌனம் நிலவியது.

அவன் என்ன தான் செய்கிறான் என்று பார்க்கத் தோன்றியது; ஒருபுறம் கூச்சமாகவும் இருந்தது. தலையை மட்டும் மெதுவாய்க் கீழே நீட்டிப் பார்த்தேன்:

மறு நிமிஷம் 'ஐயோ' என்று வாய் தொண்டைக்குள் தானாகக் கதற, கைகள் தாமாக ஊன்ற, கால்கள் பாய, மார்பு படபடக்க எழுந்து உட்கார்ந்தேன்.

அழகாய்ப் படுத்திருந்த வெள்ளைக்காரன் அங்கே இல்லை; அவனுக்குப் பதிலாக தாறுமாறாகவும் கோர மாகவும் வெட்டுண்டது போன்று ஓர் அரை உடல் அங்கே கிடந்தது!

நான் எதற்கும் பயந்ததில்லை; ஆனால் இப்போது பயந்துவிட்டேன். உன்னால் பயப்படாமல் இருக்க முடியுமா, கேட்கிறேன்? கொஞ்ச நேரத்திற்கு முன்னால் ஓர் ஆளைத் தனியாகப் பார்க்கிறாய்; ஆனால் திடீரென்று அவன் இருக்கும் இடத்தில் பார்வைக்கே பயங்கரமான அரை உடல் கிடந்தால் பயப்படாமல் இருக்க முடியுமா

உன்னால்? கண்கட்டு வித்தை நடக்கும் இடம் அல்ல என்பதையும் மறந்துவிடாதே.

நீ எப்படி பயந்திருப்பாயோ, நானும் பயந்து விட்டேன். கீழே பார்க்கவும் எனக்குப் பயமாக இருந்தது. சிரித்து பயத்தை விரட்டலாம் என்று நினைத்தால் சிரிப்பும் வாயை இளித்துவிட்டது. ரயிலிலிருந்து இறங்கிவிடலாம் என்றால் அது தலை கிறுகிறுக்கும்படி ஓடிக்கொண்டிருந்தது. அபாயச் சங்கிலியை இழுக்கலாமே என்று நீ சொல்லலாம். ஆனால் அபாய காலத்தில் அந்த நினைப்பே உண்டாவதில்லையே!

பயம் ஐந்து நிமிஷங்களைச் சாப்பிட்டபின் என்னை த தட்டிக்கொடுத்து சமாளித்து கொண்டேன் உயிராசை ஒருபுறம் இழுக்க, பயம் மறுபுறம் இழுக்க இறுதியில் பயம் சிறிது பின் வாங்கியது. பேய் பிசாசு களைப்பற்றி நான் எப்போதும் நம்பியதில்லை; 'எப்போதும்,' என்று சொல்லுவதில் பொய்க்கலப்பு இருக்கிறது; சிறு வயதில் இருட்டில் கூட போகமாட்டேன். விவரம் அறிந்தபின் நான் பேய் பிசாசுகளை நம்பியதில்லை. அவை ரயில் பிரயாணம் செய்ததாய்,—அதுவும் மனித நண்பர்களுடன்—நான் கதையில்கூட — படிக்கவில்லை. ஆகவே கீழே கிடப்பவன்,—அல்ல,—கிடப்பது பேயோ பிசாசோ அல்ல.

பின்?

அவன் தன்னைத்தானே வெட்டிக்கொண்டிருப்பானா?

இது பைத்தியக்கார எண்ணம். வெட்டிக்கொள்ளும் போது ஒருத்தன் கூச்சல்கூட போடமாட்டானா? வெள்ளைக்காரனுக்கு ரத்தம் கூட உண்டு; இல்லையா?

என்ன யோசித்தும் எனக்கு சமாதானப்படவில்லை. யோசனையால் அச்சம் மங்கலுற்றுவிட்டது. குனிந்து நன்றாய்ப் பார்த்தேன்.

'பாண்ட், கோட்' இல்லாமல் ஒரு ட்ரௌஸர் மட்டும் அணிந்து கொண்டு அந்த உருவம் கிடந்தது. வலது கையும், வலது காலும் இருக்கவேண்டிய இடங்கள் காலி; மார்பின் வலப்பாகம் சரிந்திருந்தது. எல்லாவற்றிலும் கோரம் அந்த உருவத்திற்கு மூக்கே இல்லை!

நான் முதலில் பார்த்த பொம்மை அழகுக்குப் பதிலாகப் பயங்கரமான—அல்ல; அசிங்கம், சே, அசிங்கமான உருவம்...

நினைப்பில் தடுமாறி என் கால் ஒன்று கீழே சாய்ந்து சப்தம் எழுந்தது.

''யாரது?'' என்றது உருவம், குயிலொத்த குரல்.

நிர்ப்பந்தத்தால் கீழே இறங்கினேன். உருவம் கண்களையும் திறந்துவிட்டது, வலது கண் இருக்கவேண்டிய ஸ்தானத்திலிருந்து ஒரு பள்ளம் முறைத்தது; அங்கே கருவிழி, ஒன்றுமே இல்லை? மொத்தத்தில் அந்த உருவம், மனிதவுடலில் இடது பாதியாகத் தோன்றியது...

''யார் நீ?'' அதுவும் பயந்துள்ளது என்று அதன் குரலும், இடது கண்ணும் சாட்சி சொல்லின.

''நானா?...நான்...,'' என்று குழறினேன்.

''நீ எப்படி இந்த வண்டியில் வந்தாய்?'' அந்த வெள்ளை அரை உடல் தன் இடது கையை ஊன்றி எழுந்திருக்க முயன்றது; முடியாமல், கீழே தொப்பென்று சாய்ந்தது; மீண்டும் சிரமப்பட்டு எழுந்து உட்கார்ந்து விட்டது.

''இது ரிஸர்வ் வண்டி என்று உனக்குத் தெரியாதா; கறுப்பு நாயே, உனக்கு புத்தி இல்லையா?''

கடவுளே! உனக்கு (கடவுளுக்கு அல்ல, உனக்கு) இந்தமாதிரி அனுபவம் ஏற்படவே கூடாது. எமனுக்கும்

பதில் சொல்லிவிடலாம்; அரை உடலுடன் பேசுவது என்றால்...

"தெரியாமல்..."

"உடம்பு கறுப்பு என்றால் புத்தியுமா கறுப்பு உனக்கு?"

இருமியது; மறுபடி மெத்தைமீது விழுந்து இடது கையால் சரிந்திருந்த மார்பின் வலப்பாகத்தைத் தடவிக் கொடுத்தது. அதனுடைய முணுமுணுப்பின் அர்த்தம் நான் நாசமாய்ப் போக வேண்டும் என்பதுதான். நான் ஏன் பேசுகிறேன்?

"ஏய், அந்த பெர்த் மீது, பாட்டிலுக்குப் பக்கத்தில் கிடக்கிறதே சின்ன சீசாவிலிருந்து இரண்டு துளி வாயில் ஊற்று."

அப்படியே செய்தேன், உலகத்தை ஆட்டும் மகா சக்தியின் கட்டளைக்குப் பணிவது போல்.

சிறிதுநேரம் அந்த உருவம் துடிதுடித்தது. கழுத்து அறுபட்டதும்; கோழி துடிக்குமே, அதுபோல.

கடவுளே, புனாலைக் கொஞ்சம் முன்னாலாவது அனுப்பக்கூடாதா? என்று என் நெஞ்சு துடிதுடித்தது.

கொஞ்ச நேரத்தில் அந்த உருவம் நிதானமுற்றது இடது விழியையும் வலது பள்ளத்தையும் விழித்த அந்த பார்வை?

மறுபடியும் அது கஷ்டப்பட்டு எழுந்து அமர்ந்தது.

"நீ எப்போது இங்கே வந்தாய்?" அதன் குரலில் அதிகாரமோ ஆத்திரமோ இல்லை; சாதா உணர்ச்சி ஒலித்தது. நான் உண்மையைக் கூறினேன்.

"அப்படியானால் நீ என்னை உடையுடன் பார்த்திருக்கிறாய்!" நான் ஒப்புக்கொண்டேன்.

"உட்காரேன்." என்ற குரலில் சாமானியத்தன்மை மட்டும் அல்ல, ஒருவிதப் பணிவும் இருந்தது. உட்கார்ந் தேன்.

"பிராந்தி கொஞ்சம் சாப்பிடுகிறாயா? எடு..."

எடுத்துக்கொடுத்தேன்; நான் சாப்பிடவில்லை. இடது கையில் கிளாஸைப் பிடித்து குடித்துக்கொண்டே அந்த அரை உடல் கேட்டது: "என்னை இப்படிப் பார்க்க உனக்குப் பயமாக இல்லையா?"

நான் இப்போது பயப்படவில்லை. இந்த உருவம் பேய்பிசாசு அல்ல என்று எனக்கு நிச்சயமாகிவிட்டது. சாதாரண மனித ஜன்மம்; ஆனாப் வெள்ளைப் பிறப்பு.

"நீ கொடுத்தாயே, சின்ன சீசாவிலிருந்து மருந்து. அது மார் வலிக்கு—"

அதற்கு சிகரெட் பற்றவைத்துக் கொடுத்தேன்.

"ஆடை எல்லாம் அணிந்திருந்தபோது நான் எப்படி இருந்தேன்?"

"உம்," என்ற முனகலில் பொருள்வைத்துப் பதில் சொன்னேன். "இப்போது?"

பதிலைவேண்டுகிற கேள்வி அல்ல அது; பதில் அந்த உருவிலேயே இருந்தது. இடது கண்ணில் நீர் பிறந்தது; வலது பள்ளத்தின் அடியில் நீர் ஊற்று இருக்கலாம். தென்படவில்லை. அந்த உருவம்—பாவம், மனிதன் என்று சொல்ல முடியாவிட்டாலும், அரைமனிதன் என்பதால் என்ன நஷ்டம்? அரைமனிதன் வருந்தினான்.

"நான் பிறவியிலேயே இப்படி இருந்தேன் என்று நினைக்கிறாயா?"

அவனை அறியவேண்டும் என்று ஆவல் எனக்கும் அதிகமாய் இருந்தது.

"நான் குழந்தையாக இருக்கும்போது ரொம்ப அழகாய் இருந்தேன். என் தாயாரின் குழந்தைகளில் நான் தான் ரொம்ப அழகு என்று பெருமைப்படுவாள். இப்போது அவள் என்னைப்பார்த்தால்......நல்லவேளை அவள் போய்விட்டாள். அவள் ஆன்மா சாந்தி அடைவதாக!"

அரைமனிதன் பெரிய மூச்சு ஒன்றைச் சீறினான்; அதாவது, மூக்கு இருக்கவேண்டிய இடத்திலிருந்த துவாரத்திலிருந்து 'புஸ்ஸ்' என்று சத்தம் வந்தது

"எத்தனை பெண்கள் என் காதலைவேண்டி என் பின்னால் அலைந்தார்கள்? எத்தனை பெண்களுடன் நான் காதல் நாடகம்—சட்டத்திற்கு விரோதமாக—நடத்தினேன்! இப்போது மேரிகூட என்னைப்பார்க்கப் பயப்படுவாள்..."

'மேரி யார்?" என்றேன்; என் ஆத்திரம் எனக்கு

அவனுடைய இடது கண் ஒரு முழு சூரியனைப் போல பிரகாசித்தது.

"மேரி என் கண்மணி. என் காதலி. என் உயர்வான பாதி! லண்டனிலுள்ள ஒரு பெரிய ஹோட்டலில் நடன விருந்து நடக்கும்போது அவளைச் சந்தித்தேன். கன்னியர் கும்பலில் அவளிடம் என் மனம் ஏனோ சென்றது. டான்ஸுக்கு அவளை அழைத்தேன்... அந்த டான்ஸை நினைத்தாலே—ஆஹா! எவ்வளவோ பெண்களுடன் ஆடியிருக்கிறேன்; ஆனால் அவள் எவ்வளவு ஹிதமாக இருந்தாள்! மறுநாள் விருந்தாளியாக அவளால் அழைக்கப்பட்டேன்..."

"தனியாகவா இருந்தாள்?"

"இல்லை. தகப்பனாருடன் பிரயாணம் செய்து கொண்டிருந்தாள். விருந்தின்போது அவளுடைய தகப்ப

னர்ரிடம் என் நிலைமையைச் சொல்லி, அவளை மணக்க விரும்புவதையும் ஜாடையாகிச் சொன்னேன், நல்ல மனுஷர், ஒப்புக்கொண்டார். பிறகு அவளிடம் தனிமையில் என் காதலை விவரித்து விவாகத்தைப் பிரேரேபித்தேன்...அப்போது அவளுடைய முகம் எப்படி சிவந்தது! ரோஜா, ரோஜா!''

புனா நெருங்கிக்கொண்டிருந்தது. அரை மனிதனின் காதல் காப்பியத்தைக் கேட்டுக்கொண்டிருக்க எனக்கு நேரம் இல்லை. கதையின் முடிவுக்கு அவனைத் துரத்தினேன்.

'நீ எப்படி இப்படி மாறினாய்?''

அரை மனிதன் பரிதாபமாய்ச் சொன்னான்! ''மேரி என்னை இனி திரும்பியும் பார்க்கமாட்டாள். நான் எந்தப் பெண்ணுடனும் டான்ஸ்கூட செய்யமுடியாது! ஐயோ, நான் செத்திருக்கக் கூடாதா?...''

''மனைவியின் காதல் உனக்கு ஆறுதல் அளிக்கும்....''

'யார் கண்டார்? அவளுக்கோ இளம்பருவம் நான்... என்னை மனிதன் என்று யாரும்கூற முடியாது...எனக்கு கலியாணமாகி மூன்று வருஷங்கள்தான் ஆகின்றன. என்னால் அவளுக்கு இரண்டுமாதங்கூட சுகம் இல்லை... அந்த பாழும் ஜெர்மன் எருமைகள் எதற்காகவோ சண்டை ஆரம்பித்து விட்டார்கள்; அவர்கள் நாசமாய்ப் போக! எனக்கு யுத்தத்தில் சேருவதற்கு இஷ்டமில்லை; ஆனால் சர்க்காரின் கட்டளையை யாரால் மீறமுடியும்? ஜெர்மானியனோடு சண்டைபோட்டு உயிர்விட்டாலும் கௌரவமுண்டு. இந்த மஞ்சள் பேய்களுடன், குள்ள ஜப்பானியர்களுடன் சண்டைபோட என்னை அனுப்பி விட்டார்கள், அஸ்ஸாமில் ஜாப்கள் குண்டுபோட்டார்கள் அல்லவா? அப்போதுதான் எனக்கு உடம்பெல்லாம் காயம் ஒரு கையும், ஒருகாலும் போச்சு ஒரு கண்ணில் கண்ணடி புகுந்தது; மூக்கு காணாமல் போய்விட்டது.

இதோ இந்த மார்பைப்பார், ஒருபக்கம் சரிந்துள்ள தல்லவா? அடிக்கடி சகிக்க முடியாதபடி வலி எடுக்கிறது. அதற்கு மருந்து என் மருண்டையைப் பார்...?

பார்த்தேன். ஒட்டு போட்டாற்போலத் தோன்றியது, இரு பிளவாக.

''என் மூளைகூட சரியாக வேலை செய்வதில்லை அதற்காகவும் அடிக்கடி மருந்து சாப்பிடுகிறேன்... இவ்வளவும் போனபிறகு உயிர்மாத்திரம் ஏன் தப்பியதோ தெரியவில்லை. ஆஸ்பத்திரியில் ஒருவருஷம் கிடந்தேன்; என்னைக் கொன்றுவிடும்படி டாக்டர்களைக் கெஞ்சினேன். என் மூளை மிகவும் உயர்ந்ததாம்; கைகால், எதுபோனாலும் அது நாட்டுக்கு உபயோகப்படுமாம். அதற்காக என் உயிரை உடலுடன் ஒட்டிவைத்துவிட்டார்கள். பாவிகள்! ஆனால் மூளை சரியாக இல்லையே!''

அரைமனிதன் புலம்பல் எனக்கு இரக்கம் உண்டாக்கியது. சிறிது கழித்து கேட்டேன்: ''நான் முதலில் பார்க்கும்போது நீ முழுமனிதன்போல இருந்தாயே!''

''அந்த கண்ராவியைப் பார்க்கிறாயா? இதோ, இந்த கோட்டையும் பான்டையும் எடுத்துப்பார்...''

அந்த இரண்டிற்கும் கீழே கட்டையால் செய்யப்பட்ட ஒரு கை, ஒரு கால் பூட்டுடன்!—, ஒரு போலி மூக்கு, மூக்குக்கண்ணாடி, சின்ன மருந்து சீசா...இவ்வளவையும் தரித்துக்கொண்டால் அவன் முழுமனிதன்போலக் காட்சி அளிப்பான்!

எனக்கு ஒரே திகைப்பு: நீடிக்கவிட அவன் விரும்பவில்லை. போலும்,

''பத்து நிமிஷத்தில் புனா வந்துவிடும். நீ கொஞ்சம் ஜன்னலுக்கு வெளியில் பார்த்துக்கொண்டு இரேன்'

என் தலையை வெளியே அனுப்பினேன். சுமார் பத்து நிமிஷங்கள் நான் உள்ளே பார்க்கவே இல்லை.

"சரி!" என்றான் அவன். திரும்பினேன். கைகால் மூக்கு எல்லாவற்றையும் கோர்த்துக்கொண்டு, முன் போலவே முழுமையாகத் தோற்றம் அளித்தான் அவன். அந்தப் போலி மூக்குதான் எவ்வளவு அழகாய் பொருந்தியிருந்தது! 'பொம்மைபோல்' அல்ல, பொம்மைதான் பாவம், அவன் உடல் இப்போது கனமாய்த்தான் இருக்கும்!

அவனுடைய இடது கையில் கைத்துப்பாக்கியிருந்தது; அதை என்னிடம் காட்டிக்கூறினான்: "சகிக்க முடிந்த வரையில் சகித்துப் பார்ப்பேன்; கடைசியில் இந்த கைத்துப்பாக்கி இருக்கவே இருக்கிறது. மாய்த்துக்கொண்டு விடுவேன்!"

அவனுடைய பேச்சில் வீரத்தன்மை பீறிட்டது.

புனா ஸ்டேஷனில் ரயில் நின்றது. அவன் தொப்பியைத் தலைமீது வைத்துக்கொண்டான். போலியான வலது கரத்தை கால் சட்டையில் புகுத்தினான். இடது கையில் 'வாக்கிங் ஸ்டிக்கை' எடுத்துக்கொண்டு கம்பீரமாக, ஆனால் சற்று சிரமத்துடன் கதவருகில் சென்றான். பக்கத்து வண்டியில் உட்கார்ந்திருந்த நண்பன் கைலாகு கொடுத்து கீழே இறக்க இருவரும் புறப்பட்டனர்

என் நண்பனே, நான் வருகிறேன்" என்று என்னிடம் விடை பெற்றுக்கொண்டு 'டக்டக்' என்று அவன் நடந்ததைப் பார்த்தால், அவன் அரை மனிதன் என்று எவனாலும் கண்டு கொள்ள முடியாது.

அவன் நடந்து செல்வதை பிளந்த வாயுடன் பார்த்துக்கொண்டிருந்தேன். வெள்ளைக்காரர்கள் கெட்டிக்காரர்கள் என்பதில் சந்தேகமே இல்லை. அரைமனிதனை முழுமனிதனாகத் தோன்றச் செய்யும் சாமர்த்தியமும், அறிவும் உனக்கு உண்டா? வெள்ளைக்காரன், வெள்ளைக்காரன் தான்.

ஆகையால், வெள்ளையரின் ஈடும் இணையும் அற்ற அறிவுக்கு என் வணக்கம் செலுத்துகிறேன்.

# புத்திர பாக்கியம்

'தார்க்கால்'

**பிறக்கும்போதே தாயைப் பலிகொள்ளும் நண்டைப் போல், அந்தப் புத்திரன் — சொத்துக்கு உடையவன்—அவதரித்தான்.**

**பிள்ளை பிறந்த உற்சாகத்தில் காத்த பெருமாள் பிள்ளைக்கு மனைவியின் மரணம்கூட மனசில் தைக்கவில்லை.**

**பற்றற்றுத் திரிந்த மனம் மீண்டும் லௌகிகத் தில் பசையோடு ஒட்டத் தவிக்கிறது பணம் சேர்க் கும் ஆசை வலுக்கிறது**

**ஆனால், குலத்தை விளக்க வந்த அந்தக் குலவிளக்கோ—**

*தபால்கார நாயுடு நாலணாவைத் தடவிப் பார்த்துக் கொண்டே கீழிறங்கினார். அவருக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. வெற்றுக் கடிதத்துக்கு நாலணாக் காசைக் கூப்பிட்டுக் கொடுத்தானே மனுஷன் என்று ஆச்சரியம் பொங்கிற்று. "காசு பணம் பெருத்தவனுக்கு நல்ல காரியமின்னா துட்டு சல்லிக் காசுதான். சூறை கூட எறியலாம்" என்ற எண்ணம், சத்திரத்து மனிதனை அளந்து பார்த்தது.*

கடிதத்தை மூன்றாவது தடவையாகப் படித்தாயிற்று. பிள்ளையார் சுழியிலிருந்து, கீழே 'மச்சினன்' செண்பக ராமபிள்ளை கையெழுத்துவரை எழுத்து விடாமல் வாசித்து முடித்தார் காத்த பெருமாள் பிள்ளை. கைகளி ரண்டும் சந்தோஷத்தைத் தொட்டு விட்டதுபோல் பூரித்து நடுங்கின. நெஞ்சில், ஒரு புது வெள்ளம் ஊற் றெடுத்துப் பெருகிற்று. தோளில் கிடந்த சிட்டுத் துண்டு பட்டு அங்கவஸ்திரமாக மாறிவிட்டதுபோல நழுவி நழுவி விழுந்தது. காத்தபெருமாள் பிள்ளை கடிதத்தைக் கையில் பிடித்தபடி, சத்திரத்து ஜன்னல் வழியாக, சாலைக் குமாரசாமி கோயில் வர்ணக் கோபுரத்தைப் பார்த்து மெய் மறந்து நின்றார்.

காத்த பெருமாள் பிள்ளையின், சம்சாரம் கோமதி அம்மாளுக்கு மாராந்தையில், நேற்று முன்தினம் ஆண் குழந்தை பிறந்து தாயும் பிள்ளையும் சுகமாக இருக் கிறார்கள் என்ற நல்ல செய்திதான் சற்று முன் வந்திருந் தது அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்த ஒருவனைக் குடை ராட்டில் ஏற்றி குலை தெறித்துப் போகும் வேகத்தில் சுழற்றினால், எப்படியிருக்கும்? அதுமாதிரி பிள்ளை வாளுக்கு தலை சுற்றிக் கிறுகிறுத்தது. உலகம், அதன் சூது நிறைந்த சலனம், வாழ்க்கை என்று சோடித்துச் சொல்லு கிற செக்காட்டம் எல்லாம் ஒரு உயிருள்ள காடுபோல் அவரைச் சுற்றி நெருங்கி நெருங்கி வந்தன "பெண் மக்கள் இருவருக்கும் நகை நட்டுக்கு வழிதேடி சேர்க்கிற இடத்தில் சேர்த்து கண் குளிரப் பார்த்தாயிற்று ஒரு பொறுப்பு இல்லை, ஒரு கவலை கிடையாது. இருக்கிற காரை வீட்டையும், பாட்டப்பத்து களத்தடிக் காணியை யும் 'கண்ணுக்குப் பிறகு பெண் மக்களுக்கு' என்று எழுதி வைத்துவிட்டு கட்டையைப் போட வேண்டியதுதான்; காத்த பெருமாள்பிள்ளை பரம்பரை அங்கேயே வாழி பாடி கதையை முடித்துவிடும்" என்றுதான் நேற்றுவரை உறுதியாக நினைத்திருந்தார் பிள்ளை.

"ஆறுமாத காலமாக படுத்த படுக்கையாகக் கிடந்த கோமதியம்மாள் இந்தப் பிரசவத்திலும் ஒரு பெண்ணைப் பெற்றுப் போட்டுவிட்டு கண்ணை மூடிவிடுவாள். குழந்தையும் தாயைத் தொடர்ந்து போய்விட்டால் தொல்லையில்லை. சாலைக் குமாரசாமி சன்னிதிக்கு வந்து 'முருகா' என்று உட்கார்ந்துவிடலாம். நமக்கு அவன் தான் ஆண் சந்தானம்."

டாக்டர் குஞ்சிதம், ஆரூடம் அக்கினி ஜோசியர் இவர்கள் இருவரும் கொடுத்த தீர்க்க தரிசனத்தின் பிரகாரம் மேற்படி முடிவுக்கு வந்த பிள்ளை, மனச் சஞ்சலத்தால் விரட்டப்பட்டு, பஸ் ஏறி திருநெல்வேலிக்கு வந்து ஒரு வாரம் ஆயிற்று தான் ஒன்று நினைக்கத் தெய்வமோ ஒன்று நினைக்கும் என்பது அவருக்கு என்றுமில்லாதபடி நிதரிசனமாகத் தெரிந்தது.

ஆண் குழந்தை பிறந்திருக்கிறது!—

'இல்லை' என்று போனது தெய்வ சங்கற்பத்தால் இத்தனை வருஷங்கள் கழித்து 'இருக்கிறது' என்று வீட்டுக்கு வந்திருக்கிறது. பிறந்தது ஆண் என்று காதில் விழுந்தால், யமனை விரட்டியடித்துவிட்டுப் பிழைத்துக் கொள்ளுவாள் கோமதி. பாவம், அவள்தான் எப்படித் தவித்தாள்! 'கொள்ளி வைக்கப் பிள்ளை இல்லாமற் போனால் குலத்துக்கு வசையாச்சே' என்று அவள் காக்காத விரதம், சுற்றாத கோவில் குளம், போகாத மாதாந்தம் உண்டா? கடைசியாக, குமாரசாமி, கரைக் கோயிலான் கண்ணைத் திறந்து பார்த்திருக்கிறான்!

அவருடைய மனத்திலே,—

பிரவச அறையில் கிடக்கும் மதலை வளர்ந்து சிலேட்டும் புத்தகமுமாய்ப் பள்ளிக்கூடம் போயிற்று. பத்தாவது தேறி, பட்டணத்துக்கு ரயிலேறுகிறது. படிப்புக்கு ஆயிரம் இரண்டாயிரம் வேண்டுமே! பையன் முகம் கறுக்கலாமா? உழைப்பு, உழைப்பு, ஓயாத விடி

விளக்கு உழைப்பு, அப்பாட, பையனின் காலேஜ் படிப்பு முடிந்துவிட்டது. போர்டை வீட்டில் மாட்டிவிட்டு, நாலுகைச் சட்டை போட்டுக்கொண்டு கோர்ட்டுக்குப் போகிறான். பிறகு... கல்யாணம்!... கண் குளிர்ந்துவிடும். கோமதிக்குத் தலைநரைத்துவிட்டது. நான்மாத்திரம் என்ன! உழைத்து உழைத்துத் தேய்ந்த ஓடுதான். பரவாயில்லை. இனி நெஞ்சு வேகும். கொள்ளி வைக்கப் பையன் இருக்கிறான். வசை இல்லை. பேர் சொல்லப் பிள்ளை இருக்கிறான். நெஞ்சு வேகத்தான் வேகும்... எல்லாவற்றுக்கும் இப்பொழுதே உழைக்கவேண்டும், உழைக்காமல் முடியாது. அதெப்படி முடியும்?...

* * *

''பதினைந்துக்குக் கீழே ஒரு லக்கம் சொல்லுங்கள்'' என்று கேட்டான் கணித சோதிடம் கல்பானந்த யோகி. லோகல் பண்டு சத்திரத்தில் அடுத்த அறை தான் அவனுடைய ஆசிரமம்.

'பதிநாலு' என்று பதில் சொன்னார் பிள்ளை.

யோகியின் முகம் மலர்ந்தது 'பூ ஒன்று சொல்லுங்கள்'

'தும்பைப் பூ'

யோகி கண்ணை மூடிக்கொண்டு கணிக்க ஆரம்பித்தான் உட்குழிந்த அவன் கண்கள் மறைந்து மறுபடியும் தோன்றின.

''மூன்று நாள் ஆயிற்று, உங்களுக்கு யோககாலம் ஆரம்பித்துவிட்டது. இனி மண்ணைத் தொட்டாலும் பொன்னாகும். புத்திரனால் அதி பிராபல்யம். அதற்குப் பொறுப்பு இருக்கிறது. உழைத்தால் பலனுண்டு லக்னாதிபதி, வீட்டில் உச்சத்துக்கு வருகிறான் புத்திரனுக்கு விசேஷ யோகம் சம்பவிக்கும். கல்பனை முற்றிற்று'' என்று கையைத் தட்டினான் கல்பானந்த யோகி.

பேசாமல் கேட்டுக்கொண்டிருந்த காத்தபெருமாள் பிள்ளை முன்னாலிருந்த வெற்றிலையில் ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை வைத்து அழுத்தினார்.

திருநெல்வேலி பஸ் ஸ்டாண்டு என்ற புனித பூமியில், பிரபஞ்சத்து மானிட வர்க்கத்துக்கு ஒரு பொருட்காட்சி வைத்த மாதிரி 'கசா முசா' வென்று கும்பல் கூடியிருந்தது. ஆலங்குளத்துக்கு அடுத்த பஸ் ராத்திரி எட்டரை மணிக்கு என்று புழுதி படிந்த போர்டு தெரிவித்தது. சிமிண்ட் பெஞ்சில் துண்டை மடித்துப் போட்டு உட்கார்ந்தார் கா. பெ. பிள்ளை.

பக்கத்து வெற்றிலை பாக்குக் கடையில் சுருட்டு வாங்கிக்கொண்டிருந்த 'ஆனை முழுங்கி' ஆவுடை நாயகம் ஒரு புது சகாப்தத்தின் தூதனாக பிள்ளையின் கண்ணில் தோன்றினான். அவர் மூளை விருவிரு வென்று பேய் வேகத்தில் வேலை செய்யத் தொடங்கியது.

'தம்பியோவ்!-சிங்கப்பூர்த் தம்பி, என்ன கூப்பிடுதது கேக்கலியா?' 'சிங்கப்பூர்த் தம்பி' திரும்பிப் பார்த்தான். "நீங்களும் ஊருக்குப் புறப்பட்டு வாரீகளா?......என்ன போங்க? நான் சொன்னதை கொஞ்சங்கூட காதிலேயே வாங்காம போயிட்டீங்க. பொன்ன மக்களுக்குத்தான் நாலு காசு சேத்துவச்சா வேண்டாமிண்ணா இருக்கும் தேடி வாரலச்சுமியைத் தள்ளுத ஆசாமி ஒங்களைத்தான் பார்த்திருக்கேன்" என்று தன் மனக்குறையை வெளியிட்ட படி சுருட்டைப் பற்றவைத்தான் ஆவுடை நாயகம்.

லக்ஷம் ரூபாய்வரை ஒரே வாரத்தில் அமுக்கிவிடக் கூடிய ஒரு 'அணுகுண்டு' வழியை, தான் கண்டுபிடித் திருப்பதாக 'ஆனை முழுங்கி' இரண்டு நாட்களுக்கு முன் காத்தபெருமாள் பிள்ளையிடம் ரகசியமாகத் தெரி வித்தான். அப்பொழுது பிள்ளை கொஞ்சமும் ஆவல் காட்டவில்லை. பாரமுகமாக அசட்டை செய்துவிட்டு 'எனக்கென்ன புள்ளையா குட்டியா? இந்த யமகண்ட

வழியிலே திரட்டி யாருக்குச் சேத்து வைக்கணும்? வேறே ஆள் யாரு தம்பீ' என்று பேச்சை முடித்துவிட்டார். இது நடந்த சமயம், அவருடைய மனத்தில் நிறைந்திருந்த விரக்தி வைராக்யம் எல்லாம் இப்பொழுது கழன்று சத்திரத்துக் குப்பைத் தொட்டியில் விழுந்து விட்டன. இப்பொழுது ஆவுடை நாயகத்தை மறுபடியும் பிடரியைப் பிடித்துத் தள்ளிக்கொண்டு வந்திருப்பது, சத்திரத்து யோகி தெரிவித்த யோகசக்கரம்தான் என்று எண்ணினார். பிள்ளை பிறந்த மறுநாளே, புத்திரன் தகப்பனை லக்ஷாதிபதி ஆக்கப் போகிறானோ என்னவோ யார் கண்டது? பிள்ளைவாளுக்கு உச்சியிலிருந்து உள்ளங்கால் ரத்தம் சிவீரென்று துள்ளி அடங்கியது.

''அதெல்லாம் இருக்கட்டும், தம்பீ...சரக்கு எங்கே இருக்கு, கையிலே என்ன வேணும்—இதெல்லாம் தெரிவிக்காமல் ...... மொட்டையாச் சொன்னே அன்னைக்கு? விவரந் தெரிஞ்சாத்தானே எதிலியும் இறங்கலாம்?''

மீன் தூண்டிலை நாடுகிறது என்று தட்டுப்பட்டதும், ஆவுடை நாயகம் சுருட்டை வீசிவிட்டு 'சவுக்க' உட்கார்ந்தான்.

'சரக்குக்கு மேற்படி பேத்துமாத்துக்கு எல்லாம் நானாச்சு. இன்னைக்கு என்ன. திங்களா? அடுத்த திங்கக் கிளமை, இவ்வளவு நேரம் கணக்கு பைசல். ஒரு ஈங்குருவிக்குத் தெரியாது...உங்க கையிலே எவ்வவு இருக்கு? எம்புட்டு பெரட்டணும்ணு மாத்திரம் சொல்லுங்க'

பிள்ளை குரலைத் தணித்துக்கொண்டு சொன்னார்:

''சரக்கைக் கண்ணாலே பார்க்காம, தொகையை எண்ணி வைக்க முடியாது. ராவோடு ராவா கீழக்குறிச்சி அய்யர் கிட்டங்கியில் கொண்டு சேர்க்கிற பொறுப்பை நம்மாலே ஏத்துக்கிட முடியாது. டிபார்ட்மெண்டுலே கண்ணிலே எண்ணெய் ஊத்திகிட்டு முழிப்பா இருக்

கிறானுக. நாலும் பாத்து இறங்கணும். வசப்பிசகாக போய் மாட்டிக்கிட்டு 'உடும்பு வேண்டாம் கையை விடு' என்கிற கணக்கில் வந்து சேரக்கூடாது''

''......கொஞ்சம் சந்தேகம் இருந்தாலும் ஓங்ககிட்ட வருவேனா? ...ஆள் தெரியாமலா இந்த பதினஞ்சு வருச காலமா, முக்குளிச்சுக்கிட்டிருக்கேன்...கையிலே, ஒரு மூணு ரூவா என்ன, முப்பது ரூபா வேணுமின்னாலும் இந்த ரத வீதியிலே ஒரு வளையம் வந்தாச் சேராதா? மாராந்தைக் காவன்னா என்கிற விலாசம் லேசுப்பட்டதா என்ன?''

''ஆலங்குளம், தென்காசி, கடையநல்லூர்'' என்று அலறினான் ஸ்டாண்டுப் பையன்.

''வண்டி வந்துவிட்டது'' என்றார் பிள்ளை.

''கீழ்ச்சந்நிதித் தெருவிலேதான் புள்ளிக்காரன் இருக்கான். எதுக்கும் இண்ணைக்கு ராத்திரி பாத்திட்டா நல்லது வேறே எவனாவது தட்டிக்கிட்டுப் போயிடக் கூடாது, பாருங்க''

''இல்லை, தம்பி மாராந்தைக்குப் போய் தலையைக் காட்டிவிட்டு, நாளை காலை வண்டியிலே வந்திட்டாப் போச்சு. அங்கே......''

''இந்தக் காரியத்திலே காலதாமதம் கப்பலைக் கவிழ்த்துவிடும் என்கிறது உங்களுக்குத் தெரியாத விஷயமல்ல. எதுக்கும் ஒரு வார்த்தையைப் போட்டு வச்சிட்டால்......''

''மாராந்தைக்கு அவசியம் போயாகவேணும். அங்கே நமக்கு பையன் பொறந்திருக்கானாம், இப்பத்தான் காயிதம் வந்தது'' என்று மெல்ல ரகசியத்தை வெளியிட்டார் பிள்ளை.

''அடேடே, இவ்வளவு நேரம் ஒளிச்சு வச்சிட்டீகளே? ...ஆனாலும் இப்படி வெட்கப்படக்கூடாது நீங்க, பையன் யோக சாதகக் காரன்தான். அப்படிச் சொல்லுங்க, ஒரு யோசனை தோணுது?''

''என்ன?'' என்றார் பிள்ளை.

''ரெண்டுபேரும் மாராந்தைப் போவோம். கையிலே இருக்கிறதை எங்கிட்டத் தாருங்க. அடுத்த கடைசி வண்டி பத்தரைக்கு இருக்கு— இங்கே வந்திருந்தேன். ராத்திரியே கண்டு பேசி வைக்கிறேன். கார்த்தாலே நீங்க வந்து கலந்து மேல்காரியம் யோசிக்கலாம். எப்படி?''

பிள்ளை கொஞ்சம் தயங்கிவிட்டு 'சரி' என்றார். ''நாளைக்கு என்றால் செவ்வாய்க்கிழமை வேறே வருது. நீ சொல்லுறது சரி. சாலைக் குமாரசாமி கோயிலுக்கு எதிர்த்த சத்திரத்திலே, எதுக்கும் ஒரு ரூம் எடுத்துப் போடும். நாளை அங்கேதான் வந்து சேருவேன்'' என்று தீர்மானமாகச் சொன்னார் மாராந்தையார்.

எட்டரைமணி 'ஆலங்குளம்' பஸ் ஸ்டாண்டை விட்டு நகர்ந்தது. மாராந்தை மாரியம்மன் கீழத்தெரு, பிள்ளை வீட்டு வாசலில், இரவு ஒன்பதரை மணிக்கு வில் வண்டி ஒன்று தாயாராக நின்றது. வண்டிக்காரன் பக்கத்துக் கடையில் அவசரம் அவசரமாக விளக்கை ஏற்றிக் கொண்டிருந்தான்.

பிள்ளையும் ஆவுடை நாயகமும் வெளியே வந்தார்கள்.

''நாளைக் காலையிலே தவறாம புறப்பட்டு வாருங்க. கைவசம் கூட ஒரு நானூறு ஐஞ்ஞூறு இருக்கட்டும். எலும்புத் துண்டு வீசவேண்டியிருக்கும்,''

பிள்ளை லேசாகச் சிரித்தார்.

''பையிலே கவனம். ராவேளை பாருங்க'' என்று எச்சரித்தார்.

வண்டிக்காரன் மாட்டைத் தட்டிக் கொடுத்தான். ஆவுடைநாயகம் வண்டிக்குள் ஏறிக்கொண்டான். வண்டி 'ஜல் ஜல்' என்ற சதங்கை ஒலியோடு யூனியன் லாந்தல் வெளிச்சத்தைத் தாண்டி ஆலங்குளம் சாலைக்குப் போகிற செம்மண் தடத்து இருளில் மறைந்தது.

சற்று நேரம் அதைப் பார்த்துக்கொண்டிருந்தார். பிறகு வீட்டுக்குள் நுழைந்தார். "வைத்தியரைக் கூப்பிடப் போனவன் வந்திட்டானா?" என்று மைத்துனரைக் கேட்டார்.

"இல்லை" என்றார் மைத்துனர்.

"சாயங்காலம் நாடி எப்படி இருந்ததாம்?"

"தோஷம் இருக்கும் என்றுதான் சொன்னாரு. ரெண்டுநாள் கழிச்சாத்தான் அக்கா பொளைழக்கிறது நெசம் இல்லன்னாரு" பிள்ளைக்குத் தலை சுற்றியது. "பிரசவ பஹீனம்; வேறு ஒன்று மில்லை" என்று தான் முதலில் நினைத்தது தவறு என்று தெரிந்தது. "ஆறு மாசமாப்படுத்த படுக்கையாக் கிடந்த உடம்பு இம்புட்டா வது பெலம் இருந்ததே? குறையும் சாலைக் குமாரசாமி தான் காப்பாத்தனும். நாம்பளா நெனைச்சா ஒன்ணொண்ணை செய்கிறோம்" என்றார்.

"ஆவுடைநாயகம் எங்கே வந்திட்டுப் போறான்?"

"ஆவுடை நாயகமா?......ஒரு ஐஞ்ஞூறு கைமாத்துக் கேட்டான். 'அவசர காரியம், நாளைச் சாயங்காலம் வாங்கிக்கிடுங்க' அப்படின்னான். குடுத்தனுப்பினேன்."

"ஒங்க கையிலே ஐஞ்ஞூறுதான் இருக்குன்னு சொன்னீகளே" வீட்டிலே இப்பிடி இருக்கிறபோது, கையிலே இருக்கிறதைத் தூக்கிக் குடுத்துட்டா, அவசரத் துக்கு என்ன செய்கிறது? எங்கிட்டயும் காத்துட்டு இல்லை அட, ஒரு லாபத்தைப்போல் நஷ்டமின்னா......"

பிள்ளை இருந்த இடத்திலேயே அதிர்ந்தார் மைத்துனர் வார்த்தையை, இருட்டிலே நழுவ விட்டு விட்டு மெல்ல எழுந்து கூடத்தில் விரித்த ஜமக்காளத்தில் தலையைச் சாய்த்தார்.

நினைவு என்ற புற்றிலிருந்து ஈசல்கள் கிளம்பி மொய்க்க ஆரம்பித்தன, படுக்கை கொள்ளாமல் அங்கு மிங்கும் புரண்டார்.

வீட்டுக்குள்ளிருந்து, குழந்தை 'குவா குவா' என்று அழுகிற சத்தம் வந்தது. அந்தச் சத்தம், அவர் மனப் புண்களில் மருந்து தடவி வாழைக் குருத்தால் ஒற்றியதுச் போன்ற சுகத்தைக் கொடுத்தது. அதைக் கூர்மையாக செவிகுளிரக் கேட்டபடி படுத்திருந்தார் பிள்ளை. மைத்து னரும் வைத்தியரைக் கூட்டிககொண்டு பதினோரு மணிக்கு வந்து சேர்ந்தார். கோமதியம்மாளுக்குப் பிரக்ஞை தப்பிவிட்டது. வைத்தியர் நாடியைச் சோதித்து விட்டு 'பார்க்கலாம்' என்றார்.

''குழந்தைக்குப் பாலூட்ட வேறு யாரையாவது ஏற்பாடு செய்யுங்கள்'' என்று சொல்லிவிட்டுப் புறப் பட்டார். அவர் முகத்தில் கவலை தோய்ந்திருந்தது.

பிள்ளைக்குத் தூக்கம் வரவில்லை.

இரவு மூன்று மணியிருக்கும். மைத்துனர் வந்து அழைத்தார். ''அக்கா உங்களைப் பார்க்கம்ணு மிங்கிறாள்.''

கோமதியம்மாள் படுக்கையில் வதங்கிக் கிடந்தாள். சிறிது பிரக்ஞை இருந்தது. சோகம் செறிந்த அவள் முகத்தில் ஒரு புதிய ஒளி ரேகை விட்டிருந்தது.

காத்தபெருமாள் பிள்ளை பக்கத்தில் உட்கார்ந்தார். கோமதியம்மாள் படுக்கையிலிருந்து எழுந்திருக்க முனைந்தது அவருக்குப் பொறுக்க முடியவில்லை.

மெல்ல அவள் கைகளை எடுத்துப் பற்றிக்கொண்டு ''கோமதி, உனக்கு என்ன வேணும். சொல்லு'' என்றார்.

அவள் பேசாமல் அவரைப் பார்த்துக்கொண்டிருந்தாள். நாக்கு எழவில்லை அவ்வளவுதான். பிரக்ஞை மறுபடியும் ஒளிந்துகொண்டது.

வீட்டுப் பெண்டுகள் பொருமிக் கண்ணீர் விட்டார்கள். மைத்துனர் வாயில் துண்டைக் கொண்டு மூடியபடி விம்மினார்.

''இங்கே அழக்கிழக் கூடாது யாரும்!'' என்று தைரியஞ் சொல்லிவிட்டு கூடத்துக்குப் போனார் பிள்ளை.

''கோமதி போகிறாள். இருந்திருந்தால், பையனை வளர்த்துப் பார்ப்பதில், ஒத்தாசையாக இருந்திருப்பாள். ம்......அது ஒன்றுதான் அவளுக்குக் குறை......வேறு என்ன? அவள் மகராஜி'' என்று பற்பல நினைவுகள் அவரைச் சூழ்ந்தன.

விடிந்து, செவ்வாய்க்கிழமை கால் வைக்கிற நேரத்தில், கோமதியம்மாள் புறப்பட்டுப் போய்விட்டாள்

ஊரார் வந்தார்கள். வீட்டில் ஒரே அழுகையும் அமளியுமாக ஆயிற்று. பிள்ளைக்குக் காரியம் ஓடாமல், அதிர்ச்சியில் இடிந்துபோய் உட்கார்ந்திருந்தார்.

'பெண்மக்க'ளுக்குச் சொல்லியனுப்பினார்கள். பாலூரிலிருந்தும் பாளையங்கோட்டையிலிருந்தும் அவர்கள் வந்துதான் 'எடுப்பார்'கள்'

மைத்துனர் செண்பகராம பிள்ளை, பண்ணை வீட்டாரிடம் போய் ஐஞ்னூறு ரூபாய் கைமாற்று வாங்கிக் கொண்டு வந்ததாகப் பிள்ளையவர்களிடம் நடுவில் தெரிவித்துக்கொண்டார்.

ஒன்பது மணிக்குத் தந்திச் சேவகன் வந்தான்-''உடனே புறப்படவும்'' என்று ஆவுடைநாயகம் கொடுத்திருந்தான். ''ஹ்ம்......'' என்று சிரித்தார் பிள்ளை.

பதில் தந்தி கொடுப்பது முடியாதாகையால், நம்பிக்கையான ஒரு ஆளைப்பிடித்து ''வீட்டில் துக்கம். கோமதி தவறிப் போனாள். காரியத்தை இப்பொழுதுக்கு நிறுத்தி வைக்கவும்'' என்று சூசகமாக ஒரு குறிப்பைக் கொடுத்தனுப்பினார்.

''மனைவியைப் பறிகொடுத்த மனிதனுக்குக் கவலையைப் பார்த்தீரா?'' என்று ஊரார் தமக்குள் 'குசமுச' என்று பேசிக்கொண்டார்கள்.

''எல்லா வாரிசு பிறந்திருக்கிற தெம்புதான்'' என்றார் ஒருவர்.

காடேற்று முடிந்தது. பிள்ளையின் அதிர்ச்சியில் பெரும்பகுதி நீங்கிவிட்டது. பழையபடி நான்கு நாட்களுக்கு முன் வேலை செய்ய ஆரம்பித்த யந்திரம் தன் முழு வேகத்துடன் சுழன்றது. குழந்தை......குழந்தை...... மகன்......என்ற ஒரே நினைவு அந்த இயந்திரத்தை அவருடைய நெஞ்சு என்ற பழைய கொட்டகையில் வைத்து முடுக்கிப் பெரு முழக்கத்தோடு ஓட்டிற்று. கொட்டகை அதிர்ந்து விழுந்துவிடுமோ என்று பயப்படும் படியாக இருந்தது, அந்த பூத இயந்திரத்தின் அமானுஷ்யத் துடிப்பு.

அவருடைய மூத்த மகள் தன் தம்பியைத் தூக்கி வைத்துப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் கண்கள் அழுது அழுது வீங்கியிருந்தன. பக்கத்தில் இளையமகள் புட்டிப் பாலைத் தயாரித்துக் கொண்டிருந்தாள்.

இரு பெண்மக்கள் மீதும் பிள்ளைக்கு ஒரு வெறுப்பு உண்டாயிற்று. 'இவர்கள் இரண்டுபேரும் வீட்டைவிட்டு நகர்ந்தார்கள் ஆண் குழந்தையும் பிறந்தது' என்ற நினைப்புத்தான் காரணம்.

மைத்துனரைக் கூப்பிட்டார், குழந்தையைக் கவனித்துக்கொள்ளும்படியும், தான் திருநெல்வேலிக்குப் போய்

விட்டு 'பதினாறு'க்குள் வந்து விடுவதாகவும் சொல்லி விட்டுப் புறப்பட்டார்.

கையில், சொந்த வீட்டை அடமானம் செய்து வாங்கிய ரூபாய் ஆயிரமும் சொச்சமும் இருந்தது.

சத்திரத்து அறைக்கு வந்து சேர்ந்தார்; அங்கு ஆவுடைநாயகம் தூங்கிக்கொண்டிருந்தான். 'தம்பி, தம்பி' என்று கதவைத் தட்டினார். அவன் விழித்துக் கொண்டு கதவைத் திறந்தான்.

''வாங்க. அண்ணி காலம் ஆகிப்போச்சு போலிருக்கு? ம்..., கடைசி காலத்திலே விட்டுட்டுப் போயிட்டாக''

''......அவ கதை முடிஞ்சிது, எல்லாம் அவன் பார்த்துக்கிட்டிருக்கான், எதிர்த்தாப்பிலே.''

''குழந்தை நல்லா இருக்கில்லா?''

''ஏதோ இருக்கிறான், அவன் ஒருத்தன் பொளைச்சுக் கிடந்தாப்போதும். மத்த எல்லாம் கவிழ்ந்து போனாலுந் தான் என்ன?''

''...நாம் யாருக்கு என்ன அநியாயம் செய்தோம்; அப்படி விதிவந்து சூழ! உங்க தாத்தா காத்தபெருமாள் பிள்ளை இருந்த கியாதிக்கு, அவர் பேர் சொல்ல ஒங்க குடும்பத்திலே, இப்பத்தான் பொறந்திருக்கிறான். இது தான் தெய்வசங்கல்பம் என்கிறது.''

''......மேல வீட்டுப் பாட்டையாவும் அப்படித்தான் சொன்னாரு. 'புள்ளை உங்க தாத்தாவை உரிச்சு வச்சாப் போல இருக்கான். பயதத்துக்களைத் தாண்டி தீர்க்கா யுசாக் கிடப்பான்பாரு' என்றார்... ஏதோ? நாம் நெனைச்ச படியா எல்லாம் நடக்கு?''

''இப்ப பாருங்க, அன்னைக்கு, நான் ஒங்க வீட்டி லிருந்து புறப்படறப்போ, இப்படி நீங்கவரத் தாமசப்

படும், இங்கே கொடுத்த அச்சாரம் முங்கிப்போகுமின்னு கனவிலேயும் நெனச்சா இருந்தோம்?''

''என்ன தம்பி, விவரமாச் சொல்லு?''

''திங்கக்கிழமை ராத்திரியே புள்ளியைக் கண்டு பேசி ஆயிரத்தை அச்சாரமாகக் குடுத்தேன். 'சி.ஐ. டி. தொந்தரவு பலமாக இருக்கு. நீங்க சரக்கை நாளை ராத்திரிக்குள்ளே 'டெலிவரி' எடுத்துக்கிடணும்' அப்படிண்ணாங்க. நீங்க வருவீக, வந்ததும் தொகையைக் கட்டிப்புட்டு, சரக்கை அய்யர் கிட்டங்கியிலே தள்ளி 'செக்'கை வாங்கிக்கிடலாமின்னு பிளான் போட்டிருந்தேன். காலையிலே ஒங்களைக் காணலை. தந்தியைக் குடுத்தேன். பதில் தெரிஞ்சதும் அப்படியே அசந்து போய்ட்டேன். இதுக்குள்ளே போலீஸ், ஸி ஐ டி. காரனுக்கு உளவுதெரிஞ்சி மும்மரமாக இருக்கிறதாகக் கேள்விப்பட்டேன். ஒண்ணும் ஓடலை, இங்கே வந்து பேசாமப் படுத்திட்டேன். நீங்க குடுத்த அஞ்ஞூறு என் கையிலிருந்த அஞ்ஞூறு ரெண்டும் மண்ணாய்ப் போச்சு.''

பிள்ளை பேசாமல் கேட்டுக்கொண்டிருந்தார். பணம் பறிபோன அதிர்ச்சி அவர் நெஞ்சை ஒரு 'குலுக்குக்' குலுக்கிற்று.

''ஏன் மண்ணாய்ப் போச்சு என்று வாயைப் பொத்திக்கிட்டு உட்காரணும்? போலீஸிலே எழுதிவைப்போம். ஏமாளிப் பயல்னு நெனச்சாங்களா?''

ஆவுடை நாயகம் சிறிது சிரித்தான், பிள்ளைக்குக் கோபம் வந்தது. ''நீங்க, காரியத்தினுடைய வகை தொகை தெரியாதமாதிரி பேசுறீக, ஏன் குடுத்தே, எந்த சரக்குக்குக் குடுத்தே, 'பெர்மிட்' இருக்கா? இப்படி கேள்வி வளைச்சுகிட்டுவரும்' வீண் தொந்தரவு, அகப்பட்டுக்கிண்டா, அவமானம் வேறே.''

''இதெல்லாம் தெரிஞ்சுதான் என்னை இளுத்துகிட்டு வந்தியா?''

''தெரியாமல் என்ன?... ஒங்க தாமசத்தினாலே காரியம் குட்டிச் சுவராகப் போச்சு. இல்லாட்டா, ஒரு லக்ஷம் அடிச்சிருக்கலாமே! ஆசை இல்லாவிட்டால், தைரியம் வருமா? ஏதோ நம்பிக்கை வச்சுத்தானே, பணத்தைத் தந்தீங்க எங்கிட்ட.''

ஆவுடை நாயகத்தை அந்த அறையிலேயே கழுத்தைப் பிடித்து நெறித்துக் கொன்றுவிடலாமா என்று ஒரு எண்ணம் தோற்றிற்று பிள்ளைக்கு. ''சீ—கொலைகாரன் மகன் என்றல்லவா தன் குழந்தையைப் பழிப்பார்கள்'' என்ற அச்சம், ஆத்திரத்துக்கு அறிவுவிலங்கு பூட்டியது.

...சரி, ஆவுடைநாயகம், போனதை எண்ணி என்ன செய்ய? இருக்கிறதைப் பார்ப்போம். மேற்கொண்டு ஏதாவது வழியிருக்கா? கிட்டங்கி அய்யருகிட்ட கேட்டா இப்படிச் சொல்ல மாட்டாரா?''

''அவனா? அவன் பெரிய கொள்ளைக்காரனாச்சே அதிலேயும் இந்தத்தடவை ரொம்பக் கள்ளப்பட்டுப் போயிட்டான். இனிமேல் அவனை வழிக்குக்கொண்டு வருகிறது என்றால் அசாத்தியந்தான்!''

''எதுக்கும் ஒரு அஞ்நூறு ரூபாயைக்கொண்டு காட்டினால், பய வலையிலே விழுவானா மாட்டானா?''

ஆவுடைநாயகம் நிமிர்ந்து உட்கார்ந்தான். ''கொஞ்சம் கஷ்டப்பட்டு வேலை செய்யணும்! பய இந்த ஆவுடைநாயகம் கண்ணியிலே விழாம எங்கே போயிடுவான்?...அப்போ, நீங்க ரூபாய் சகிதம் தயாராத் தான் வந்திருக்கியண்ணு சொல்லுங்க''

தான் விரித்த கண்ணியில் ஆவுடை விழுந்துவிட்டது என்று நிச்சயப்படுத்திக்கொண்டார் காவனனாபிள்ளை.

''எதுக்கும் தயாராத்தான் இருக்கேன். நீ புறப்பட்டா எனக்கு காரியம் முடியும்ணுதான் தோணுது. அஞ்ஞூறு பாதாளமட்டும் பாயுமே, தம்பீ''

''ம... அஞ்ஞூறா?...அய்யனை நீங்க லேசுப்பட்ட ஆளுண்ணு நினைக்காதீங்க! எமன்கிட்ட கருப்பு மார்க் கட் பண்ணினவன் அவன்?

''நம்மகிட்ட பண்ணுகிற மாதிரிதான்.''

''ஆயிரத்துக்குக் கொறைஞ்சு அவனை மறுபடியும் நாடமுடியாது. யோகம் இருந்தால் பெரிய ரூபா நாலுக்கு ஒரு தட்டுத்தட்டலாம்.''

''சரி, ஆயிரமே வச்சுக்க. இடம் எது?''

சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு ஆவுடைநாயகம் பிள்ளை காதுக்குள் இட ரகசியத்தை உபதேசித்தான்

''சரி, நீ போ. மிச்சத்தைக் கையிலே எடுத்துக்கிட்டு நான் சரியாக பதினொரு மணிக்கு வாறேன்.''

ஆவுடைநாயகம் பணத்தை வாங்கிக்கொண்டு புறப் பட ஆயத்தமானான்.

* * *

மறுநாள் காலை பத்து மணி வெயில் சுள்ளென்று அடித்தது. வீட்டிலிருந்து ஒரு கடிதம் வந்து அறையில் கிடந்தது. பிள்ளை எழுந்து சோம்பல் முறித்துக்கொண்டு அதை எடுத்தார். அவருடைய முகத்தில் விவரிக்க முடியாத வைராக்கியமும் கொடுமையும் குடி கொண்டிருந்தது. கடிதத்துக்குள் என்ன சேதி இருக்கிறதோ என்ற சோதனையில் மனம் இறங்கியது. கைகள் கடிதத்தை உடைக்கத் தயங்கின.

'குட்மார்னிங்' எனறு ஒரு ஸல்யூட் அடித்தான் எதிரே நின்ற போலீஸ் ஜவான். அவனை எங்கேயோ பார்த்தமாதிரி இருந்தது ஒரு துண்டுக் கடிதத்தை நீட்டி விட்டு அவன் போனான்.

கடிதம் ஸி. ஐ. டி. இன்ஸ்பெக்டரிடமிருந்து வந்தது. நெடுநாளாக நடந்துவந்த கூட்டுறவுக் கொள்ளை

மார்க்கட் நபர்களைக் கையும் களவுமாய்க் கண்டு பிடிப்ப பதில் உதவிசெய்ததற்காக சொந்த ஹோதாவில் மிகுந்த நன்றி தெரிவித்திருந்தார். அதோடு கவர்ண்மெண்ட் வெகுமதிக்கும் சிபாரிசு செய்திருப்பதாகக் கண்டிருந்தது.

கடிதத்தைக் கிழித்துக் குப்பைத்தொட்டியில் போட்டார் பிள்ளை. அடுத்த கடிதத்தை உடைத்தார். அதை எழுதியது பிள்ளையின் மூத்த மகள்.

பதினாறு விசேடம் கழிந்ததும் தம்பியைத் தானே எடுத்துக்கொண்டு வளர்க்கத் தீர்மானித்திருப்பதாகவும், அதனால் அவர் தன்னோடு வந்து வீட்டில் இருக்க வேண்டுமென்றும், தன் மாப்பிள்ளையும் இது விஷயத்தில் மிகுந்த கவலையோடு இருப்பதாகவும் எழுதியிருந்தாள். அதோடு தங்கச்சி சிறியவள் என்பதனால், அவள் பேச்சைக் கேட்டு தம்பியை அவள் வளர்க்கும்படி விடலாகாதென்றும் எழுதியிருந்தாள். கடைசியாக, தம்பி குமாரஸ்வாமிக்கு இப்பொழுது புட்டிப்பால் கரைத்துக் கொடுத்து வருவதாகவும், திருநெல்வேலியிலிருந்து நாலைந்து பால் புட்டிகள் கட்டாயம் வாங்கிக்கொண்டு வரவேண்டுமென்றும் சொல்லி முடித்திருந்தாள்.

பிள்ளை கடிதத்தை முழுவதும் படித்து நிமிர்ந்தார் அவர் நெஞ்சில் ஓடிய பூதாகாரமான இயந்திரச் சுழற்சி ஒரு வலிப்பு வலித்துக் குரூரமாகச் சத்தமிட்டு வேகத்தை நிறுத்தியது. அது இரைந்துகொண்டிருந்த கட்டிடம் நொறுங்கிக் குமைந்தது. என்றாலும் இத்தனை நாள் ஓடியதால் வந்த வேகத்தில், சக்கரம் தலைகிறங்கிச் சுழன்றுகொண்டிருந்தது.

பையில் சில்லறையை எண்ணிப் பார்த்தார். சரியாக ஆறணா இருந்தது. இங்கிருந்து பஸ் ஸ்டாண்டுக்கு ஒரணா. அங்கிருந்து மாராந்தை அஞ்சணா இதைச் செலவழித்துக்கொண்டு போகப்போகிறது எங்கு? வீடா அது?

அடுத்த அறையில் கல்பானந்த யோகிக்குப் பிறகு, ஹனும ஜோஸ்யர் ஒருவர் இருந்தார். அவரிடம் அஞ்சணாவைத் தட்சிணை வைத்துக் கையை நீட்டினார் காவன்னா பிள்ளை.

"புத்திரன் ஜனனம். வேளை நீசம். அப்பனைத் தெருவிலே நிறுத்தி ஈசவரணாக்கி அழகு பார்க்கும்" என்றார் ஹனும ஜோஸ்யர்.

கையை வெடுக்கென்று பறித்துக்கொண்டு சாலைக் குமாரஸ்வாமி கோயிலுக்குள் நுழைந்தார் மாராந்தை காத்த பெருமாள் பிள்ளை.

"குமாரஸ்வாமி, வந்துவிட்டேன்" என்றார். வேகம் மங்கித் தள்ளாடிய இயந்திரம் நின்றது. நெஞ்சு நொறுங்கி விழுந்த அதை மூடிற்று.

தாயாருக்கு ஈமக்கொள்ளி வைத்த மதலை தகப்பனாருக்கும் 'கொள்ளி' வைத்தது. சித்திரை நட்சத்திரத்தில் பிறந்தது பிறகு என்ன செய்யும்?

# கிரஹணம்

ரகுநாதன்

**பூமி—சூரியன்—சந்திரன்**<br>
**தாய்—தந்தை—குழந்தை**<br>
**பக்கிரிசாமி ஒரு கொத்தனார்;**<br>
**பாப்பத்தி அவர் சம்சாரம்.**<br>
**இசக்கியம்மா ஞை இருவருக்கும் பிள்ளை;**<br>
**ஆணுக்கு ஆண், பெண்ணுக்குப் பெண்.**

அன்று விடியற்காலையில் பாப்பாத்தி படுக்கையை விட்டு எழுந்திருக்கும்போது முகத்தில் அருளே இல்லை. இரவு எப்படியும் வந்து விடுவார் என்ற நம்பிக்கையோடு, மாலையில் வெளுத்த புடவைகூடக் கட்டிக் கொண்டாள். அன்றைய மஞ்சள் குளிப்பு வீணாகாது என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால் அவர் வரவில்லை, ஏற்கெனவே தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்த அவளுடைய விரகதாபத்துக்கு, மூட்டைப் பூச்சியும், சீகாரைப்பாயின் சிலும்பல்களும் தூபமிட்டன. அவருக்கு என்று பிழிந்து எடுத்து வைத்திருந்த வெந்நீர்ப் பழையதில், புழக்கடைக் கொசுக்கள்தான் செத்துக் கிடந்தன.

பழையதை எடுத்துக் கழனிப் பானையில் கொட்டி விட்டு "இந்த வேலையை இவுக விட்டுத்தொலைச்சாலும் தேவலெ. இருந்தாலும் இப்படியா பள்ளி ............

இல்லாமே. இந்த இசக்கி மூதி எங்கே போய்த் தொலைஞ் சிதோ. மூதிக்கு எந்திரிச்சவுடனேயே விளையாட்டுத் தானோ?'' என்று முணகிவிட்டு, அடுப்பில் தோசைக் கல்லைப் போட்டான். முந்திய நாள் மிஞ்சிப்போன தோசைமாவின் புளிப்பை மாற்றுவதற்காக, சோடா உப்பைத் தேடி, பரணில் துழாவினாள். எப்படியும் காலையில் அவர் வந்துவிடுவார் என்று அவளுக்குத் தெரியும். சோடா உப்பைத் தோசையில் கலந்து பிசைந்து விட்டு, கல் காய்ந்துவிட்டா என்று நீர் தெளிக்கப் போனாள்.

அதற்குள், ''இந்தா. நான் பழயபடியும் போவணும். இப்பவே சோத்தை வடிச்சிரு'' என்று குரல் அடுப்பங் கரைச் சுவரில் மோதி பாப்பாத்தி காதில் விழுந்தது.

காய்ந்த கல்லில் தண்ணீர் சுரீர் என்றது. பாப்பாத்தி நிமிர்ந்தாள். பதில் சொல்லாமல், தோசைக்கல்லை எடுத் சுவரில் சாய்த்தாள்.

களைத்துப் போய் வந்திருந்த பக்கிரிசாமி கையில் கொண்டுவந்த போசன பாத்திரத்தையும், தச்சுமுழம், கொத்துக் கரண்டி, ரஸமட்டம் முதலிய கருவிகளையும் பரணில் வைத்து விட்டு, கிணற்றங்கரை பக்கம் போனார். போகும்போது பாப்பாத்தியைப் பார்த்தார்; அவள் பார்வை விறைத்திருந்தது.

நேற்று இரவு வராததுதான் இதற்குக் காரணம் என்பதை உணர்ந்து கொள்ள முடியாத அவ்வளவு நபுஞ்சகன் அல்ல, பக்கிரி. எல்லாம் இருட்டுகிற வரைக் குத்தான் என்று அறிந்தவர். சிரித்துக்கொண்டே, கிணற் றில் பட்டையைப் போட்டார். ''செல்லாயி நயம் சரக்கு தான்; சரியான நாட்டுக் கட்டை!'' என்று எண்ணியவர் முந்திய இரவு அடிவாணந் தோண்டிய பள்ளத்தில் சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் நடந்து கொண்ட திரு விளையாடலை நினைத்தார். அவருக்கே சிரிப்புப் பொங்கி யது. உடலில் இன்பம் கிளுகிளுத்தது.

குளித்துவிட்டு வந்தவர் அடுப்பங்கரையைப் பார்த்து, "இசக்கியை எங்கே? கடைக்கி கிடைக்கிப் போயிருக்குதா?" என்று கேட்டார்.

பதில் இல்லை; வெறும் தூண்டில்தான் வந்தது. மீன் சிக்கவில்லை.

சிரிப்பு அவருக்கு உடன் பிறந்தது. சிரித்தார். கூடத்துக்கு நடந்தார். கூடத்துக்கு வந்தபோது, தெருவிலிருந்து பெண் இசக்கியம்மா—எட்டு வயதுச் சிறுமி—சிணுங்கிக் கொண்டே ஓடிவந்தாள்.

திண்ணையில் துண்டைப் போட்ட கொத்தனார், "ஏ புள்ளே! ஏன் அழுதுக்கிட்டே வாரே" என்று கேட்டார். அந்தப் பிள்ளையோ பதில் சொல்லாமல் நேரே, அடுக்களைக்குப் போயிற்று.

பாப்பாத்திக்கோ பக்கிரிமீதுள்ள கோபத்தை யார்மீது காட்டலாம் என்ற துடிப்பு. இசக்கியம்மா வரவும், "ஏ அழுதுணி மூதி. ஏன் கண்ணைக் கசக்குதே?" என்று கேட்டாள்.

முதலில் வெறும் சிணுங்கல்தான் பதில். சிணுங்கலோடு சிணுங்கலாய். "இங்கெ பாரு அம்மா எதிர்த்த வீட்டுச் சுடலை என்னெப் பார்த்து, கெட்டவார்த்தை செய்யக் கூப்பிடுதாம்மா" என்ற வார்த்தைகள் பிறந்தன.

இந்த அதீதமான புகார் பாப்பாத்தி மனதில் அந்த வேளையில் என்னவோ போலத் தைத்தது. "மூதி மூதி. அந்தப் பயலோடெ சேராதென்னு உனக்கு எத்தனை தரம் மாரடிக்கது?" என்று கத்திக் கொண்டே, முதுகில் ஒரு அறை வைத்தாள்.

இசக்கி கதறினாள். அடிகள் தொடர்ந்தன. வெளித் திண்ணையிலிருந்த பக்கிரிசாமி இத்தனையும் கேட்டுக் கொண்டுதானிருந்தார்.

''இந்தா பாரு புள்ளெயை ஏன் போட்டு அடிக்கிறே. அதட்டினால் போறாதா?'' என்று மீண்டும் தூண்டிலை எட்டி வீசினார். மீண்டும் தோல்விதான்.

பாப்பாத்தியம்மா அடிப்பதை நிறுத்திவிட்டு ''செத்துப் போட்ட அப்பனுக்கே விதரணை இல்லெ. இவளை அடிச்சித்தான் என்ன ஆவுது'' என்று சலித்துக் கொண்டே, பக்கிரியை முதுகில் குத்தினாள்.

கொத்தனார்வாளுக்கு தன்னைத் தன் சம்சாரம் குத்தாமல் குத்துவதைத் தாங்க முடியவில்லை ''இந்தா, வந்தவுடனேயே சண்டைக்கி வரிஞ்சி கட்டியே'' என்றார்.

''பின்னே என்னா? நான் ஒருத்தி இருக்கேனே என்ற லட்சைகூட இல்லாமெ—'' என்று இழுத்தாள் பாப்பாத்தி.

''நீ இருக்கது தெரியாமலா இருக்கு. தொலைஞ்சா போயிட்டெ?'' என்று எதிர்த்துத் தம்மைச் சமாளிக்க முயன்றார். ஆனால் வார்த்தைகள் தம்முள் விக்கின.

''தொலைஞ்சி போனாத்தான் அலுப்பு விட்டதே. என்று கத்திவிட்டு, ''ஏம் மூதி. இன்னம் ஏன் அழுதுக் கிட்டிருக்கே'' என்று பக்கத்தில் நின்ற இசக்கியை அடிக்க ஆரம்பித்தாள்.

''இந்தா பாரு. புள்ளெயை அடிக்காதே'' என்று ஆணையிட்டார் ஆண் சிங்கம்.

''ஐயோ! பொண்டாட்டி புள்ளெமேலே எவ்வளவு கர்சனை!'' என்று சிலுப்பிக் கொண்டே தாக்கினாள், பாப்பாத்தி.

தன்மீதுள்ள கோபம் முழுவதையும் அந்த அப்பாவிக் குழந்தை மீது செலுத்துவதை அவரால் தாங்க முடிய வில்லை.

''சொல்லிக்கிட்டே'ருக்கேன்'' என்று சத்தமிட்டவாறே எழுந்து சென்று, பிள்ளையை உதறிப் பிடுங்கிவிட்டு, பாப்பாத்தியின் முதுகில் ஒரு அறை அறைந்தார். எதிர் பார்த்ததுக்கு விரோதமாக அடி உறைத்து விழுந்து விட்டது.

ஓ வென்று அலறிக் கொண்டே கீழே உட்கார்ந்து அழ ஆரம்பித்தாள், பாப்பாத்தி.

'' எனக்குச் சோறும் வேணாம். ஒரு மண்ணும் வேணாம் நான் போறேன்'' என்று கோபித்துக்கொண்டு, தச்சு முழம், கொத்துக் கரண்டி, ரஸமட்டம் முதலிய வற்றை எடுத்துக்கொண்டு திண்ணையில் கிடந்ததுண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு நடந்தார் பக்கிரி.

அடிபட்ட முதுகைத் தடவிப் பார்த்துக்கொண்ட இசக்கி. கைவிரலில் தடம் தட்டுப்படும்போதெல்லாம் விக்கி விக்கி அழுது கொண்டிருந்தது. அதன் மனம் மட்டும் எதிர்த்த வீட்டுச் சுடலை சொன்ன கெட்டவார்த் தைப் பேச்சில் நின்றது.

பாப்பாத்தியும் அழுதாள்.
உலையில் சோறு கொதித்தது.

* * *

பூமி—சந்திரன்—சூரியன்
கிரஹணம் பிடித்தாய்விட்டது

* * *

பக்கிரிசாமி கொத்தப் பிள்ளைமார் குடியில் பிறந்து விட்ட காரணத்தினால், சிறுவனாய் இருந்த காலம் முதற் கொண்டே, கரண்டி பிடிக்கும் கட்டிட வேலையில் ஈடு பட்டார். கலியாணமாகாமல் இருந்த காலத்திலும் கொகுலத்துக் கிருஷிணன்'மாதிரிதான் வாழ்க்கை நடத்தி னார். அந்தத் தொழிலில் வசதிகள் ஜாஸ்தி. அவர்களு டைய பறிக்க முடியாத உரிமை அது. கட்டிட வேலைக்கு

செங்கல் சுண்ணம்பு சுமக்க வரும் ......... சிறுமிகளோடு முறை செப்பி விளையாடும் உரிமையும் அவருக்கு உண்டு. ரவிக்கை அணியாத நாட்டுக் கட்டைகள் முந்தானைச் சேலையைச் சுருட்டி, தலையில் மணையாக வைத்துக் கொண்டு, செங்கல் கூடைகளைச் சுமந்து வரும்போது, அவர் தயிர்க்கலையம் கொண்டு வரும் கோபியரைக் கண்ட பரமாத்மாவே ஆய்விடுவார். அவர்களுடைய திமிறிய உடல் கட்டையும் அங்க அசைவுகளையும் பார்த்துக்கொண்டே, வேலை செய்தால், கரண்டி தன்னையறியாமலே விறுவிறுப்புக் காட்டும். கன்னிகழியாச் சிறுமியரிடம் கைச்சரசமாடுவதிலிருந்து, விந்துக்கு விட்ட விரைச் சுரையான வத்தல் தார்வரை கைவைத்து அனுபோகவகை கண்டவர், ''என்ன இருந்தாலும் வருமா?'' பாப்பாத்தி சிவெப்பா மட்டும் இருந்தா போதுமா?' என்று அடித்துப் பேசும் திறமையுடையவர்.

எனினும் பாப்பாத்தியை ஊரறிய கைபிடித்த நாளையிலிருந்து அவளிடம் கசப்பைச் சம்பாதித்துக் கொண்டவரல்லர். இடையிடையே சிறுபூசல் வரத்தான் செய்யும். ஆனால் அதற்குரிய ஆயுசுகாலம் அவருக்குத் தெரியும். பக்கிரியின் நடவடிக்கையைப்பற்றி பாப்பாத்திக்கு மனசில் வெறுப்பு இருந்தாலும், பக்கிரியிடம் வெறுப்பு கிடையாது. மனைவியை தாஜா பண்ணுவதில் கைக்காரன். பாப்பாத்தி இதை வேறுவிதமாக நினைக்கமாட்டாள். இருவருக்கும் அத்தனை பிணைப்பு, அவ்வப்போது வரும் மூன்றே முக்கால் நாழிகைப் பூசல்களெல்லாம் எங்கு, எப்போது, எப்படித் தீரும் என்று நன்றாக அறிந்தவர்.

பாப்பாத்தியும் அப்படித்தான். புருஷனும் தானும் வீஞ்சிக்கொண்டால்கூட, உள்ளத்திலுள்ள அன்பு குறையாது. புருஷன் வீட்டோடு இருந்தால், ஆட்டுக்கறி வாங்கி வைப்பதிலெல்லாம் குறைச்சல் கிடையாது. பக்கத்து வீட்டுக்காரி, ''நேத்து இப்படி முறைச்சிக்கிட்டு

கிடந்தீக. இன்னைக்கி புருஷனுக்கு அக்கரையா கறி யெடுத்துப் போடுதியே என்ன இருந்தாலும் புருஷன் கிறது தெரியாமலா இருக்கு?'' என்று கிண்டலாகக் கேட்டாலும் ''ஆமாத்தா'' என்று சலிப்பதுபோல் காட்டி தன்னுள் சிரித்துக்கொள்ளும் சுபாவமுடையவள். பாப்பாத்தி தன் புருஷனைப்பற்றி அவளுக்கு அவ்வளவு நம்பிக்கை. எனினும் அன்று காலையில் பக்கிரிசாமி முறைத்துக் கொண்டு, சாப்பிடாமல் கொள்ளாமல் போனது என்னவோ போலிருந்தது. கொஞ்சம் கிராக்கி பண்ணலாமே என்று நினைத்தாள், ஆனால் வண்டி தடம் மாறிவிட்டது.

காலையில் கோபித்துக் கொண்டு போனவர் ராத்திரி வருவாரா என்ற சந்தேகம் அவளுக்கு. வந்தாலும் வராவிட்டாலும் சோற்றை ஆக்கி வைப்போம் என்று நினைத்தாள். இசக்கியிடம் கூட அன்று நல்லபடியாய் நடந்து கொள்ள முடியவில்லை அவளால் பக்கிரிசாமி வந்தால் வாய் கொடுத்துப் பேசக்கூடாது என்று நினைத் தாள். பழைய குறும்பின் குறுகுறுப்பு.

மாலைக் கருக்கலில் சோற்றை வடித்து இறைக்கி விட்டு, நம்பிக்கையற்றுப்போய் வாசல் நடையில் வந்து நின்றாள். ஆனால், எதிர்பாராத விதமாக, தெரு மூலையில், கொத்தனார்வாள் கையில் உபகரணச் சுமையோடு உலா வருவது தெரிந்தது. உடனே தன்னுடைய சுயமரியாதைக்குப் பங்கம் வந்துவிடக் கூடாதே என்ற சிந்தனை அவளைவீட்டுக்குள்ளே தள்ளிக் கொண்டு போயிற்று. ஆனால், உயரமான சாரத்தில் ஏறிச் செல்லும் பெண்களின் லீலைகளையும் தீகாரண்ய மாக அளந்து விடும் அவர் கண்கள் பாப்பாத்தி உள்ளே நுழைவதையும் கண்டு விட்டது. தன்னுள் சிரித்துக் கொண்டார்.

வீட்டுக்குள் வந்ததும் துண்டை உதறித் திண்ணையில் போட்டுவிட்டு, பரணில் தச்சுமுழம், ரஸமட்ட வகையறாக்களை வைத்துவிட்டு, ஒன்றும் பேசாமல், கிணற்றடிக்குப் போனார். கால்கழுவிவிட்டு வீட்டுக்குள் வந்தார். பாப்பாத்தியிடம் நேரடியாகப் பேச, நாக்கு வளையவில்லை. ''ஏ, இசக்கி, சோறாக்கியிருந்தா போடச் சொல்லேன்.'' என்று கார்வார் பண்ணிவிட்டு, வெளித்திண்ணையில் வந்து உட்கார்ந்தார்.

கொஞ்ச நேரம் கழித்து, ''போட்டாச்சின்னு சொல்லு மூதி'' என்று இசக்கியை, பாப்பாத்தி கார்வார் பண்ணுவது பக்கிரிசாமி காதில் விழுந்தது. பாவம் அந்த அப்பாவி இசக்கியை இழுத்தடிப்பதைவிட, தானே நேரில் போவது நல்லது என்று தடுக்கவில்லை. போய் இலையின் முன் உட்கார்ந்தார். வெறும் வெந்தயக் குழம்பும், காணத் துகையலுந்தான். சாப்பாடு ருசிக்கவில்லை.

''காலையிலெகூடச் சாப்பிடல்லென்னு தெரியுமே. வேறெ ஏதாச்சும் வச்சா என்னவாம்?'' என்று இலையைப் பார்த்து முறைத்துக் கேட்டார். காலையில் வாங்கிய அடியை மறக்காத இசக்கியும் பக்கத்திலிருந்து அப்பாவையும் அம்மாவையும் திருகத்திருக விழித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

தான் கேட்டதற்குப் பதில் வராததால் பக்கிரி சலித்து விடவில்லை. இலையைவிட்டு எழுந்திருக்கும்போது, ''அடேயப்பா இன்னம் கோபம் ஆறினாப்பிலெ தெரியலியே, இன்னும் எத்தினி நேரத்துக்காம்'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார்.

பாப்பாத்திக்கு களுக்கென்று சிரிப்பு வந்தது. பல்லைக்கடித்துக் கொண்டாள். கையைக் கழுவி முடிந்ததும், பக்கிரிசாமிக் கொத்தனார்வாள் திண்ணை

யில் வந்து படுத்துக் கொண்டார். ஆனால், தூக்கம் வரவில்லை. உள்ளே என்னென்ன நடக்கிறது என்பதை யெல்லாம் காதாலேயே உணர்ந்து கொண்டார்.

படுக்கை விரித்த சப்தம். இசக்கியை உறக்க மாட்டிய சப்தம், அலுத்துப் போய் உடம்பை முறித்துப் புரண்டு படுக்கும் சப்தம், இடையிடையே பாப்பாத்தி தூக்கத்தில் ஆழமில்லை என்பதற்கு அறிகுறியான பெருமூச்சுக்கள். பக்கிரிக்குச் சிரிப்பு வந்தது, புரண்டு படுத்தார்.

* * *

பூமி — சந்திரன் — சூரியன்
கிரஹணம் இன்னும் விடவில்லை

* * *

எப்போதடா உள்ளே போவது என்றிருந்த பக்கிரிக்கு திடீரென்று சிலுசிலுத்த சாரல், காலத்தால் செய்த நன்றியாகத் தென்பட்டது. உடனே உதறியடித்து எழுந்திருந்து துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு வீட்டுக்குள் நடந்தார். போகும்போது, ''வெளியே படுக்கலாமின்னா மழை வேறே தூறுது'' என்று விட்டுக்கொடுக்காமல் வாய்விட்டுக் கூறிவிட்டு, பாப்பாத்தி படுத்திருந்த இடத்தைப் பார்த்தார்.

கலைந்து கிடந்த கூந்தல் தலைக்கு ஹிதம் கொடுக்க ஒருச்சாய்த்துக் கிடந்தாள் பாப்பாத்தி. பக்கத்தில் இசக்கி இதழ்க் கோணத்தில் உறைந்துபோன முறுவலோடு தூங்கிக் கொண்டிருந்தாள்.

கொத்தனார்வாள் தமக்குத்தாமே சிரித்துக் கொண்டார். இசக்கியம்மாளுக்கு அடுத்துப் பாயை விரித்துத் தலையைச் சாய்த்தார். இவர் படுத்ததும், பாப்பாத்தி எதிர்த்திசையில் முதுகு காட்டித் திரும்பிப்

அந்த ஆள் ஆத்திரத்துடன் பீடியை விசிறி எறிந்தான்.

''ஆமாய்யா, உள்ளூரிலே இருக்கறவன் புளைக்கறத்துக்குப் பட்டணத்துக்கு வந்துடுங்க. பட்டணத்திலேயே இருக்கறவன் பட்டினிகிடக்கட்டும். ஊரிலே இருக்கிறவனுக்கு இடமில்லை வந்துடராங்க வரிஞ்சுகட்டிக்கினு—புளைக்கறத்துக்கு.''

மனுசனுக்கு மனுசன் ஏன் இப்படி இருக்குதுன்னு புரியல்லே. யார் யாருக்கு தீங்கு இழைச்சுட்டது என்ன? அவன் யாரோ நான் யாரோ, இவனுக்கு என் மேலே என்னத்துக்கு கோவம்? இந்தமாதிரி இடத்துலே தன்னந்தனியா மாட்டிக்கிட்டு எப்படிப் புளைக்கறது? ஊரிலே ஒரு மாதிரி கஷ்டம் என்னா, ஒண்டவந்த இடம் இப்படி இருக்கிறது. துணையுமில்லே துப்புமில்லே. ஒன்னும் புரியவும் மாட்டேன்னுதே......

அவன் படும் வேதனையும் குழந்தையின் ஓயாத அழுகையும் ஆத்திரத்தைத்தான் விளைவித்தது. 'அதன் கழுத்தை முறிச்சுப்போட்டுடவா? ஒருவழியா ஒளிஞ்சுது ஒரு தொந்தரவு.

''போனா போனா காலையிலே போனா—புடிக்கப் போன வேலையை வேரோடு பிடிங்கிட்டு வந்துடறமாதிரி என்னடாது ஆண்புள்ளை கிட்டே குளந்தையை விட்டுட்டுப் போனோமே, வேளாவேளைக்கு அவன் என்ன பண்ணுவான் என்னு நெஞ்சிலே பயமிருக்கணும். ஊரைச் சுத்தனும்னா போதும் இந்த பொம்புளைங்கிளுக்கே...

அவன் பொருமிக்கொண்டிருக்கையிலே நிழல் வாசற்படியில் தட்டியது.

''வந்தூட்டியா?''

''வராமே? சாக்கடைத் தண்ணிக்குப் போக்கிடம் ஏது? என்னா கொளந்தையே அளவிட்டுட்டியே. இதான் சாமர்த்தியமா? கொடு இப்படி—''

கோபம்அவன் வாயை அடைத்துவிட்டது. "ஆளைத் தூக்கி எறிஞ்சு பேசறத்துலே அவங்கிளுக்கு நிகர் அவங்க தான். ஒண்ணு முதுகிலே வெச்சா சரியாப்போயிடும். என்ன தைரியமா கேக்கறா பார்?—இருக்கட்டும். இப்போ கொளந்தைப் பசி அடங்கட்டும். அதான் இப்போ முக்கியம். அவளுக்குத்தான் அந்த எண்ணமில்லேன்னா நமக்குக்கூடவா இல்லே? நான் பெற்ற மகன்..."

அந்த 'ஆள்' அப்பவே போய்விட்டான். அவள் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு குழந்தையை எடுத்துவிட்டுக்கொண்டே :

"நீ எங்கேயாவது புளைப்புத் தேடினாயா? என்ன வாச்சு;

அவள் கேள்விக்குப் பதில், அவன் முக வாட்டத்திலேயே கிடைத்துவிட்டது.

'இன்னிக்கு கடைத்தெருவைச் சுத்தினேன் '' சித்தாள் வேணுமான்னு கடைகடையா ஏறிக்கேட்டேன். ஒவ்வொத்தன் என்னென்ன சொல்றான்கறே? — ஏதோ வேலையில்லேன்னு சொல்லிக் கழிச்சால் போச்சு. இடக்காப் பேசறான்க.

"சித்தாள் வேலையா? இங்கே இருக்கிறவனே ஈ ஒட்டறான் யுத்தம் வந்தாலும் வந்தது, என்ன சாமான் இங்கே இருக்குது வியாபாரம் பண்ண? என்கிறான் ஒத்தன்.

"ஒரு கடைக்காரன் வேலையில்லேன்னு சொல்லிட்டு நான் படியிறங்கினப்புறம் என்னை மெனக்கெட்டு மறுபடியும் கூப்பிட்டு, நான்தான் கடைக்காரன்—நான் இங்கே என்னத்துக்கு குந்திக்கட்டு இருக்கேன் தெரியுமா?" —ன்னு கேட்டான்.

"தெரியாதே! என்னேன். எனக்கெப்படித் தெரியும்?

''சாமான் வாங்க வரவங்களுக்கெல்லாம் அது இல்லே, இது இல்லேன்னு சொல்லியனுப்பத்தான் குந்திக்கிட்டு இருக்கேன். இல்லை இல்லை என்று கத்திக் கத்தி தொண்டை வத்திப்போச்சு. இல்லைப்பாட்டுப் போடத் தான் இனிமேல் ஒரு ஆள் போட்டுக்கணும்போல் தோணுது. பேப்பா! புளைக்கமாட்டாதவனே, பொட்டலங் கட்டக்கூட காகிதமில்லாத காலமிது—அது கூட யுத்தத்துக்கு வேணுமாம்—நீ கூடப் போறதுதானே!

''இந்தப் பட்டணத்துப் பேச்சு நமக்குப் புரிய மாட்டேன்னுது. எல்லாத்துக்கும் இடக்கா பேசறாங்க. சித்தே நேரத்துக்கு முன்னாலே தான் ஒரு நாள் என்னை ஒரு காரணமுமில்லாமலே விரட்டிட்டுப் போனான். அத்தோடே கொளந்தையெத் தனியா விட்டுட்டு எவ்வளவு நேரம் வெளியிலே சுத்த முடியுது? உன் மாதிரியா? காலையிலேபோன பொம்புள்ளே, திரும்பி வர இத்தனை நேரமாச்சுதுன்னா என்னாத்தை சொல்றது?''

''என்னாத்தை சொல்லப்போறே? யாராவது இஸ்த்துக்கிட்டு ஓடிட்டாங்கன்னு பாத்தியா?''

அவன் மனம் சுருக்கென்றது. 'வயிற்றுக்குக் கஷ்டம் வந்துட்டுதுன்னா, கொண்டவளுக்குக்கூட இவ்வளவு எளக்காரமாப் போயிடுமா?...''

குழந்தை மறுபடியும் கத்த ஆரம்பித்துவிட்டது. அவன் கண்கள் ஜ்வலிக்க ஆரம்பித்தன. 'இன்னிக்கு அவன் மனம் நோவடிக் கறத்திலேயே அவளுக்கு சந்தோசமா?''

''ஏன் அதுக்குள்ளேயும் விலக்கிட்டே?''

''சரிதான் என் புளைப்பும் உன் புளைப்பும் அதிலே தானிருக்குது.''

''என்ன அம்மே வந்ததே மொதக்கொண்டு ஒரு மாதிரியாயிருக்கே. புதிர்போட்டு பேசறே—என்ன? உடம் புக்கு பூசைக்காப்பு போடணுமா?''

அவள் குழந்தையை இடுப்பில் வைத்துக் குலுக்கிய வண்ணம் திண்ணையில் உலவியபடி, சமாதானப்படுத்த முயன்று கொண்டே:

''கொஞ்சம் அவசரப்படாமெ நான் சொல்றதைக் கேளு—இன்னிக் காலையிலே இப்படிப் போனேனா—இந்த ரோட்டோடே போனேன்—அப்புறம் ஒரு சந்திலே நுழைஞ்சேன். ஆனால் அது சந்தில்லே. ஆள் நடமாட்டம் அதிகமாயில்லை. ரெண்டு பக்கமும் தனித்தனியா பங்களாவுங்க இருந்திச்சு. அப்புறம் அப்படி திரும்பினேன் இப்படி திரும்பினேன். எனக்கு வழி மறந்து போச்சு சுத்துமுத்தும் பாத்தா ஒத்தருமில்லே. எனக்கு ஒரே அழுகையா வந்துட்டுது. நான் ரோட்டோரமா நின்னுட்டு அழுதுகிட்டு இருந்தேன்

''அப்போ ஒரு ஆள் அந்தப் பக்கமா வந்தான். என்னைத் தாண்டிப்போனான். அப்புறம் திரும்பிப்பார்த்தான். நின்னான் மேலே இன்னும் கொஞ்சம் நடந்து போனான் மறுபடியும் என்னை முழிச்சுப் பார்த்தான். அவன் பார்வை ஒரு மாதிரியா யிருந்துச்சு, என் முகத்தைப் பார்க்கல்லே. கழுத்துக்குக் கீளே, இடுப்பு வரைக்கும்தான் கண்ணோட்டம் நின்னுது. அப்புறம் எண்ணத்தை என்னவோ திடம் பண்ணிக்கிட்டு திரும்பி நேரே வந்தான்.

''ஏன் அழுவரே? எந்த ஊர்?''

''ஐயா ஊருக்குப் புதிசு—நாட்டுப்புறம் வழிதப்பிப் போச்சு''—என்னேன் விக்கிக்கிட்டே.

''ஏன் வந்தே இந்த ஊருக்கு?''

''புளைக்க வந்தேனுங்க. எங்கேயாட்டும் பத்துப் பாத்திரம் துலக்கிப்போட்டு வாசற்கூட்டி வேலையகப் பட்டா போதுங்க.''

அவள் குழந்தையை இடுப்பில் வைத்துக் குலுக்கிய வண்ணம் திண்ணையில் உலவியபடி, சமாதானப்படுத்த முயன்று கொண்டே:

''கொஞ்சம் அவசரப்படாமே நான் சொல்றதைக் கேளு—இன்னிக் காலையிலே இப்படிப் போனேனா—இந்த ரோட்டோடே போனேன்—அப்புறம் ஒரு சந்திலே நுழைஞ்சேன். ஆனால் அது சந்தில்லே. ஆள் நடமாட்டம் அதிகமாயில்லை. ரெண்டு பக்கமும் தனித்தனியா பங்களாவுங்க இருந்திச்சு. அப்புறம் அப்படி திரும்பினேன் இப்படி திரும்பினேன். எனக்கு வழி மறந்து போச்சு சுத்துமுத்தும் பாத்தா ஒத்தருமில்லே. எனக்கு ஒரே அழுகையா வந்துட்டுது. நான் ரோட்டோரமா நின்னுட்டு அழுதுகிட்டு இருந்தேன்

''அப்போ ஒரு ஆள் அந்தப் பக்கமா வந்தான். என்னைத் தாண்டிப்போனான். அப்புறம் திரும்பிப்பார்த்தான். நின்னான் மேலே இன்னும் கொஞ்சம் நடந்து போனான். மறுபடியும் என்னை முழிச்சுப் பார்த்தான். அவன் பார்வை ஒரு மாதிரியாயிருந்துச்சு, என் முகத்தைப் பார்க்கல்லே. கழுத்துக்குக் கீழே, இடுப்பு வரைக்கும்தான் கண்ணோட்டம் நின்னுது. அப்புறம் எண்ணத்தை என்னவோ திடம் பண்ணிக்கிட்டு திரும்பி நேரே வந்தான்.

''ஏன் அழுவரே? எந்த ஊர்?''

''ஐயா ஊருக்குப் புதிசு—நாட்டுப்புறம் வழிதப்பிப் போச்சு''—என்னேன் விக்கிக்கிட்டே.

''ஏன் வந்தே இந்த ஊருக்கு?''

''புளைக்க வந்தேனுங்க. எங்கேயாட்டும் பத்துப் பாத்திரம் துலக்கிப்போட்டு வாசற்கூட்டி வேலையகப் பட்டா போதுங்க.''

"அந்த ஆள் என் கழுத்தைப் பார்த்துகிட்டே 'கலியாணம் ஆயிட்டுதா'—ன்னு கேட்டான்.

"கையிலே ஒரு குழந்தை யிருக்குதுங்க—என் எசமானர்கிட்டே விட்டுட்டு வந்திருக்கேனுங்க."

"எத்தனை வயசு?"

"இரண்டு மாதங்க—"

"சரி வா. உன்னதிர்ஷ்டம் இந்த பக்கமா நான் வந்தேன்-உனக்கு வேலை வாங்கித்தரேன் என்னோடுவா" இன்னுட்டு நடந்தான். எனக்கு கொஞ்சம் பயமாய்த் தானிருந்தது. இருந்தாலும் ஆள் நடமாட்டமிருக்கிற இடமா வந்து சேர்ந்துட்டா சமாளிச்சுக்கலாம்னு மனசைத் தைரியம் பண்ணிகிட்டுப் பின்னாலேபோனேன்.

"நீ முழிக்காதே. அவன் ஒன்னும் தப்பா நடந்துக் கல்லே. ஒரு பங்களாக்குள்ளே நுழைஞ்சோம். பெரிய தோட்டம் பூவும் செடியும் பாத்தியும் பச்சையும் எங்கே பார்த்தாலும ஒரே குளுமையாயிருந்தது. கன்னுக்குட்டி யாட்டமா ஒரு பெரிய நாய் என்னைப் பார்த்து ஓடி வந்துது. அந்த ஆள் அதை விரட்டிட்டு என்னை வாசல் தாழ்வாரத்திலே நிறுத்தி வச்சுட்டு உள்ளே போனான்.

சித்தே நேரம் பொறுத்து மூணு பொம்புள்ளேங்க உள்ளேருந்து வந்தாங்க. பாப்பாரு பணக்காரு. நகையும் நட்டும் நல்ல புடவையும் கட்டிக்கிட்டு இருந்தாங்க. அவங்களுக்குள்ளே எல்லாரோ வெள்ளைக்காரன் பாஷையிலே பேசிக்கிட்டாங்க. அவங்களுக்குள்ளே ஒரு பெரிய அம்மா இருந்தாங்க. அந்த ஆள் என்னை மொதமொதல்லே விசாரிச்சமாதிரியே, அவங்களும் விசாரிச்சாங்க இன்னும் ஒன்னுரெண்டு பொம்புள்ளே விஷயங்கூட விசாரிச்சாங்க. அப்புறம் அங்கேயே குந்தவெச்சு ஆளுவந்து சோறுபோட்டா குளுதுளுன்னு பழஞ்சோறு. என் வயிறு குளுந்தது. ஒன்னெ நினைச்சுக் கிட்டேன்.

''கை கழுவி, தண்ணி யேந்தி குடிச்சுட்டு, முந்தானைலே கையைத் தொடச்சிக்கிட்டேன். உடனே இங்கிலீசுலே என்னவோ பேசினாங்க. பொம்புள்ளேங்க ஆம்புள்ளே மாதிரி இங்கிலீஸ் பேசி இன்னிக்குத்தான் நான் பார்த்தேன். உடனே ஒரு அம்மா உள்ளே போய் ஒரு குழந்தையை ஏந்தி வந்து என் மடியிலே வெச்சு பாலைக் கொடு இன்னாங்க.

''எப்படி மாட்டேன்றது? சோறு போட்டிருக்காங் களே உப்புந் தண்ணியும் உலர்ந்த வயத்திலே ஊத்தியிருக் காங்களே!—

''குளந்தையா அது? நம்ம ஊரிலே முருங்கை மரத்துலே இடையன் கொம்பு ஊறல்லே! அதுமாரி ஒரே குச்சியா. உயிர் தொண்டையிலே நூலாட்டமா ஓடிக் கிட்டிருக்குது. தொடவே அச்சமாயிருந்தது.

''தாய்ப்பாலில்லே. குழந்தைக்கு வேறு குத்தம் இல்லே, உனக்கு ரெண்டுவேளை சோறு—ரெண்டு வேளை தீனி மாஸம் எட்டு ரூபா கொடுக்கறேன். இங்கே இருந்து இந்தக் குழந்தையை நீ காப்பாற்றனும். வீட்டுக்கு ஒரே பிள்ளையிது. இருந்திருந்து பெற்ற மகன். நீ இருந்து காப்பாத்தனும்.'' இன்னாங்க அந்தப் பெரியம்மா.

''அம்மா!—என் குழந்தை?—'' நானறியாமலே அந்தக்கேள்வி என் வாயிலேருந்து வந்துட்டுது.

''உன் குழந்தைக்கு மாவு கரைச்சுக்கொடு—மாவு நான் கொடுக்கறேன். இந்தக் குழந்தைக்கு வயிற்றிலே கட்டிவிழுறது. உன் குழந்தை இதமாதிரி மோசமாயிருக் காது. என்ன சொல்றே சட்டுபுட்டுனு உன் புருஷன் கிட்டே சொல்லிட்டு வந்திடு. காலையிலே ஒரு வேளை சாயந்திரம் ஒருவேளை ஒன் குழந்தையும் பார்த்துட்டுவா —நான் ஒன்னும் அப்படியாப்பட்ட பாவியில்லே—என்ன சொல்றே?

"நான் என்ன சொல்றது. எத்தனையோ விசயம் கவனிக்கவேண்டியிருக்குது நம்ப புளைக்க வந்துட்டோம் —உனக்கு சரியா புளைப்புக் கிட்டற வரைக்கும் வயத்தே ரெண்டு பேரும் கட்டிப் போட்டுக்கிட்டிருக்க முடியுமா? என் வயத்தே அவங்க வீட்டிலே கழுவிட்டாலும் என் சம்பளம் உனக்கு மிச்சம்தானே. நான் ஒப்புக் கொண்டேன்."

மௌனம் இருவரிடையிலும் தேக்கியது. சத்திரத்தில் மூட்டையும் முடிச்சுமாய் இறங்குபவரும் வெளியே போவாருமாய் சண்டை போடுபவரும், கொட்டமடிப்பவருமாய் இரைச்சல் காதைப் பொழிந்தது. ஆயினும் இவ் விருவருக்கு மாத்திரம் அது தூரத்துச் சத்தமாய்த் தானிருந்தது.

"நீ ஒப்புக்கொண்டது தப்பு"—என்றான்.

"அப்படியானால் நம்ப இங்கே வந்ததே தப்பு."

"நம்ப புளைக்க வந்ததே தப்பு. ஆனால், நம்ப ஊரிலே மொத மொதல்லே ஒருத்தரை யொருத்தர் சந்திச் சோமே அதுவே தப்பு—"

"இப்படி ஒருத்தரை யொருத்தர் கசந்துகிட்டுப் பேசினால் என்ன பிரயோசனம். புளைக்க வந்துட்டோம் புளைச்சு ஆகணும். இந்தா மூணு ரூபா முன்பணம் வாங்கி வந்திருக்கேன். செலவுக்கு வெச்சிக்கோ—"

"இதென்ன நீ எனக்கு சோறு போடணும்னா—நான் ஆண் புள்ளையா பிறந்துட்டு இருக்கேன்!—என்னான்னு நினைச்சுட்டே உன் மனசிலே என்னை?"

அவள் தொண்டை கம்மியது.

"நீ வேறே நான் வேறென்னு துட்டு வாங்கறப்போ என் நெனைப்புலே படல்லே!—

"ஆமா—அப்போ நம்ம ரெண்டுபேரும் கூடிப் பிறந்த கொளந்தே தான் வேறாப் போயிட்டது இல்லையா?—"

கரையினின்று திரும்பும் அலைகள்போல் நினைவுகள் பின்னோக்கிச் சுருண்டன

'நல்லபடியா நாலுபேர் பேசி முடிச்சுத் தாலி கட்டின கலியாணமாயிருந்தால் இத்தனை கஷ்டம் ஏன் படணும்? ஒரு இமைப்பொழுது வெறியிலே ஏமாந்துபோன தோஷத்துக்காக, ஊரைவிட்டு ஓடிவந்து இங்கே இருக்க இடமும் புளைக்க வழியுமில்லாமே அல்லாடறோம்...'

வாய்வழி புறப்படாத விதவிதமான கேள்விகள் அவரவர் மனசை இடித்தன.

—நம்ம ஊரே நல்ல ஊர்.

—நான் பாட்டுக்கு நிம்மதியா ஊருக்கு முதலாளி வெச்சிருக்கும் மளிகைக் கடைலே வேலை செஞ்சுகிட்டு வேளா வேளைக்கு அவர் வீட்டிலேயே சாப்பிட்டு வேட்டி யுடுத்திக்கிட்டு கைச்செலவுக்குத் தினம் கால்ரூபா கல்லாப் பெட்டியிலிருந்து எடுத்துக்கிட்டு ராசாமாதிரி யிருந்தேன்.

—எனக்கு மாத்திரம் என்ன கொறைச்சல்? வீட்டு வேலையை செஞ்சிக்கிட்டு அவங்க கொளந்தையை கொஞ்சிக்கிட்டு குசாலாய்த்தானே யிருந்தேன்! அப்பன் ஆயில்லேன்னு ஒரு நாளாவது நெனைச்சிருப்பேனா! அந்த வீட்டு அம்மா தான் எனக்கு எல்லாமா இருந்தாங்களே!—

—இருந்து என்ன பிரயோசனம்? உன்னை எங்கேயாவது கட்டிக்கொடுத்து ஒழிச்சிருக்கணும்.

—ஐயோ பண்ணையிலே ஒரு ஆளுக்குத்தான் என்னை முடிச்சுப்போட்டு வெச்சிருந்தாங்களே

—அதுக்குள்ளே நீ தானே என்மேல் கண்ணேப் போட்டே!

—நீ மாத்திரம் சும்மாயிருந்தையா? அடிக்கடி கடைக்கு வந்து கட்டைப் புகையிலே கடிச்சுக்க ஒரு துண்டு கொடுன்னு என் கையை இடிச்சு இடிச்சு வாங்கிப் போனையே. மறந்துபோச்சா?

—ஒத்தரை யொத்தர் ஏன் குத்தம் சொல்லனும்? ஏமாந்து போனோம் அவ்வளவுதான்.

—எல்லாந்தான் போச்சு. அன்னிக்கு என் னவோ சீக்கிரமாகக் கடையைக் கட்டிக்கிட்டு அன்னிக்கின்னு ரயில் டேஷனுக்குப் போற வழியிலே நான் ஏன் வரனும்? நீ கடலைக்காய் கொல்லையிலே காவல் காத்துட்டு நான் வந்த வழியே, ஏன் வரனும்?

—காற்று மேட்டிலே வெக்கறத்துக்கு முத்திரையைக் கொடுத்துட்டு வந்தேன்.

—வந்தது தான் வந்தையே சும்மாப் போனையா மடியிலிருந்து பிடி கடலைக்காய் எடுத்து இந்தான்னே. சிரிச்சுக்கிட்டே. நான் நினைவு மங்கிப்போய் உன் கையைப் புடிச்சேனே! கையை உதறி என் கன்னத்திலே ஏன் ஒண்ணு விட்டலெ, அப்படியே என் தோள் மேலே சாஞ்சுட்டே. அன்னிக்குன்னு நிலவு ஏன் அப்படி காயனும், ஆற்றோரத்துக்கப்பால் சினிமாக் கொட்டகையிலேருந்து அம்பிகாபதிப் பாட்டு காதண்டை மோதி ஆளை ஏன் அப்படி சொக்கடிக்கனும்.

நான் என்னத்தைத் கண்டேன்! பிள்ளைப்பூச்சி உடனே கடிச்சுடும்னா கண்டேன்! இந்தக் புள்ளையைப் பற்றி அப்போ நெனைச்சோமா? வயித்தெ எத்தனை நாள் மறைச்சுவெக்க முடியும்?

—உடலும் மனசும் ஒண்ணுக் கொழஞ்சு நாம் ஆசையாப் பெற்ற குழந்தையே உலகத்துலே எல்லாரும் பெத்து வளக்கறமாதிரி வளக்க முடியல்லே. கழுத்துலே மஞ்சள் கவுறுஏறத்துக்கு முன்னாலே வயிற்றுலேருந்து இறங்கற குளந்தையை யார் மதிக்கிறாங்க? திருட்டுப் புள்ளைன்னு ஊரெல்லாம் சிரிக்க மானம் போய் உசிர் போகாமே ஊரை விட்டு ஓடி வந்துட்டோம்வந்து இங்கே மாட்டிக்கிட்டோம். —விதி —விதி.

மனதின் பேச்சுக்கு முடிவே கிடையாது.

## 2

அந்தக் குழந்தையின் பசியை ஆண்பிள்ளை அவனா எவ்வளவு தூரம் சமாளிக்க முடியும்? அவள் மாலையில் வந்து ஒரு வேலை ஊட்டுவாள், காலையில் மாவையும் தண்ணீரையும் கரைத்து புட்டியில் போட்டுவிட்டு அவள் போவாள். புட்டியை எந்தப் பக்கம் குழந்தையின் வாயில் வைப்பது என்றுகூட அவனுக்கு சரியாய்த் தெரியாது.

'காலையில் வேலைக்கு அலையணும். கொளந்தையைத் தனியா விட்டுட்டு எத்தனை நேரம் வெளியிலே சுத்த முடியும்? மாலை வரது எப்போ? அவள் வருவது எப்போ? அந்தக் கொளந்தையே அவள் மார்மேலே அணைப்பது எப்போ? தொண்டையைக் கிழிச்சுக்கிட்டு ஓயாத அதன் அலறல் ஓய்வது எப்போ? ஒரே வேளையானாலும் பெரிய வேளை!

இன்று அவன் குழந்தை தலைமீது மேலாக்கைப் போட்டு மூடியும் அதன் கத்தல் ஓயவில்லை. அவனுக்கு வயிறு கொதித்து.

'ஏன் ஏமாத்தறே? நீ வந்து ஊட்டறது ஒரு வேளை. அதிலே ஏன் வஞ்சனை பண்ணறே? பங்களா வீட்டுப் பையன் மாதிரியில்லையா நீ பெத்த மவன்?''

'ஏன் இப்படியெல்லாம் பேசறே? நான் என்ன பண்ணுவேன்? அந்தப் பையன் அட்டை மாதிரி உறிஞ்சிப் போடுதே. ஊறக்கூட நேரம் விடமாட்டேன்னுதே. மூக்காலே பாலு வந்தாலும் வெச்ச வாய்க்கடி விடமாட்டேன்னுதே!

'இங்கேயும் இருக்குதேன்னு கொஞ்சம் வெச்சுக்கிட்டு வரது'

'அவங்கத்தான் என் எதிரேயே உக்காந்து கவனிக்கறாங்களே' மடியிலே பிள்ளையை விட்டுட்டு அந்தப் பெரியம்மா என் எதிரே சட்டமா குந்திக்கறாங்க 'கொடுடீ; கொடுடீ குழந்தைக்குக் கொடுடீ இந்தப் பக்கம் வத்திப் போனா அந்தப் பக்கம் மாத்திப் போட்டுக் கோன்னு ஈவு இரக்கமில்லாமே பேசறாங்க.''

சோத்திலே நெய்யைக் கைநிறைய அள்ளித்தானே விடறேன்! ஆப்பிள் பழமும் ஆரஞ்சிப் பழமுமா வாங்கி வாங்கிக் கொடுக்கல்லே. என் எதிரிலேயே! உறிச்சித் தின்னுடணும். என் குழந்தைக்கு ஊறும்பாலை என் குழந்தைதான் குடிக்கணும். என் வீட்டுக்கே ஒரு குழந்தையடீ—''

' அவங்க விதவிதமாத் தீனி வாங்கிப்போடறாங்க சொகம் சேக்கராங்க ஆசை உனக்கு அங்கேதான் பொங்குதாக்கும்!''

''ஏன் இப்படி சொல்றே அங்கே தின்கறது விஷமா யிருக்கிறது போதாதுன்னு நீ வேறே இங்கே வந்தா விஷத்தைக் கக்கணுமா? என் வயத்திலே சுமந்த என் குளந்தையே நான் மறந்துட்டேன்னு நீ எனக்குப் போதிக்க வேணாம்—''

'' அடிபோடீ பாவி—''

# 3

அவன் தெருவில் மனம்போனபடி போய்க்கொண்டிருந்தான்.

அந்த ஒருவாரத்துக்குள் அவனுக்கும் அவளுக்கும் பேச்சு பட்டெனஅறுந்துபோயிற்று. அவன் கண்ணெதிரே படிப்படியாய் அவன் குழந்தை தேய்ந்துபோகும் கோரம் காணக்காண அவனுக்குச் சகிக்க முடியவில்லை. அவள்மேல் குற்றமில்லை என்று அவன் மனம் புரியாமலே அறிந்தது. இருந்தும் அவள் தனக்காகச் செய்யும் தியாகம் அருவருப்பையும் பயங்கரத்தையும் தான் விளைவித்தது. அவ்விருவருக்காக அக்குழந்தை தியாகம்...

ஒரொரு சமயம் அவள் அவ்வீட்டில் எஞ்சிய ஆகாரங்களை அவன் சாப்பிடுவதற்காகக் கொண்டுவருவாள் அதைச் சிந்தக்கூட அவன் மனம் சிலிர்க்க ஆரபித்துவிட்டது.

"சீ இதுவும் ஒரு புளைப்பா - இப்படி இந்த உசிரையும் உடலையும் ஒன்னாத்தான் வெச்சு வாழமே இருந்தால் தான் என்ன?"

—"டேய் நாட்டுப்புறம் எங்கே பாத்துக்கிட்டுப் போறே. வண்டியிலே மாட்டிக்கிட்டு சாவறத்துக்கா? சாவணும்னா சண்டியிலே போய் சாவறதுதானே!"

டாணாக்காரன் போட்ட அதட்டல் அவன் மனசில் அசரீரி மாதிரி பாய்ந்தது. "இந்த யோசனை எனக்கு ஏன் அப்பவே தோணல்லே? சம்பளத்தை அவள் பேருக்கு எழுதிவெச்சோம்னா அவ . அந்த வீட்டிலே போய் சாகவேணாம் சம்பளத்தை வாங்கிச் சாப்பிட்டுக்கிட்டு அவ நிம்மதியாயிருப்பா. நம்ப மகனாவது புளைப்பான். திரும்பி வந்தா பார்ப்போமில்லையா?

—திரும்பி வாராட்டா?

—திரும்பி வராட்டாலும் நம்ப மகன் இருப்பான் இல்லையா!

அவன் மனசிலேயே ஒரு பெரும் கனம் குறைந்தது. சந்தோஷம் கூடப் பிறந்தது. அந்தப் போலீஸ்காரனை அணுகினான்.

'சண்டையிலே சேக்கற ஆபீஸுக்கு வழி எந்தப் பக்கம்?''

# 4

அவன் திரும்பிவரும் வேளைக்குள் அஸ்தமித்து விட்டது கொளந்தையை நினைத்துக்கொண்டே அவன் ஓடோடி வந்தான். இன்றைக்கென்று அவள் அவனுக்கு முன்னாலேயே வந்திருந்தாள். அவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அவனுக்கு முகம் மலர்ந்தது. ஆனால் அவள் முகம்மாறித் திகில் பிடித்துப் போயிருந்தது. 'ஐயோ கொளந்தையைப் பாரேன்!' என்றாள் கையைப் பிசைந்துகொண்டே. அவனுக்கு அடிவயிற்றில் சுரீலென்று ஜில்லிட்டது. உள்ளே ஓடினான். அதன் காதில் ஒரு நூல் ரத்தம் வழிந்திருந்தது. வயிறு உப்பி...

அதன் அருகே உட்கார்ந்தான் அவளும் குழந்தையின் அந்தண்டைப் பக்கம் உட்கார்ந்துகொண்டாள் ஆனால் அதை அவன் உணர்ந்தானேயொழிய காணவில்லை. அவன் பார்வை குழந்தையின்மேல் நிலை குத்திப்போயிருந்தது

''என்ன சுருக்க வந்துட்டே?''

''எனக்கு இன்னிக்கு மனம் தாளல்லே. சண்டை போட்டுக்கிட்டு வந்துட்டேன்.''

அவளும் சண்டை போட்டுக்கிட்டு வந்துட்டா. அவனும் சண்டையிலேபோய் சேர்ந்துட்டான். ஆனால்

பிரயோசனம் என்ன? ஒண்ணுமில்லே குளந்தையே பாத்தவுடனேயே அவனுக்குத் தெரிஞ்சுபோச்சு அதுக்கு மூச்சு சத்தம்போட ஆரம்பிச்சுட்டுது ''கொர்— கொர்ன்னு—'' அவள் வயிற்றிலேயும் வாயிலேயும் அடித்துக் கொண்டு அழுகிறாள். ஆயினும் அவன் மனம் பளிங்கெனத் தெளிந்து சிந்திக்க ஆரம்பித்துவிட்டது.

''எல்லாம் பாரத யுத்தம் மாதிரிதான். ஊரிலே தருமராஜா கோவுல்லே காப்புகட்டி பாரதம் உபன்யாசம் வெச்சாங்களே—எல்லாரும் தோத்தாங்க எல்லாரும் ஜெயிச்சாங்க தோத்தவனும் கஷ்டப்பட்டான். ஜெயிச்சவனும் சுகப்படல்லே. என்னவோ காரியம் சாதிக்கிறாப்பிலே, சண்டை போட்டதிலே கொறைச்சலில்லே, நாள் பாத்ததிலே கொறைச்சலில்லே—பலி போட்டதிலே கொறைச்சலில்லே——அரவான் பலி.

''—கொர்-கொர்—ர்''

''மொதல்லே புளைக்கிற வளியைக் கண்டுட்ட மாதிரி குளந்தையைப் பலிவெச்சோம். அப்புறம் அதுக்குமேலே ஒசத்திக்காரியம் பண்றாப்பிலே சண்டையிலே போய் சேர்ந்தாச்சு இனிமேல் தப்பமுடியாது. கைநாட்டுக் கொடுத்தாச்சி. நாளை மத்தியான வண்டிக்குப் புறப் படணும் அப்புறம் அந்த வண்டியிலே எங்கேபோய் தள்ளறானோ போவாமே இருந்தோம்னா நாளைக்கு கைக்கு விலங்கோடே வந்துடுவான். பூட்டின்மேல் பூட்டு. புளைக்கற வழி என்ன? சாவுற வழிதான்!

''சண்டைக்குச் சேர்ந்த சமாசாரத்தை இவகிட்டே சொல்லல்லே. அது வேறுபாக்கியிருக்கு கொழந்தையைப் புதைச்சுட்டு வந்தப்புறம் இருக்குது அந்த ரகளை

''ஆனால் சண்டையிலேபோய்ச் சாவறத்துக்குன்னு ஒரு சாவுபாக்கியில்லே இப்போ நான் செத்துபோயாச்சு. உசிரோடு இருக்கிறது உசிரில்லே, உடல்தான். இதுவும் மடியறது இன்னிக்கில்லாட்டா நாளைக்கு, நாளைக்

கில்லாட்டா நாளன்னிக்கி, அன்னிக்கில்லாட்டா அதுக்கு மறுநாள்.''

விடியிருட்டில் தான் குழந்தையின் கொர்கொர் சத்தம் அடங்கியது. அவள் முகத்தை அவன் பார்க்க முடியவில்லை. அவள் கன்னத்தை ஒரு தடவை வருடினான். அவன் மனம் நெகிழ்ந்தது. குழந்தையை அதன் கந்தையில் சுற்றிக்கொண்டு கிளம்பினான்.

வெளியிலும் இருட்டு. ஒரு பீடிப்பொறி மாத்திரம் தெரிந்தது.

''யாரய்யா?''

''நான் தான் பட்டணம்''—குரலிலிருந்து தன்மேல் சீறி வந்த ஆள் என அறிந்தான்.

''சுடுகாட்டுக்குப் போற வழி எது அய்யா?''

அந்த நெருப்புப்பொறி எழுந்தது ''நான் காண்கிறேன் வா—''

'பட்டணம்' காண்பித்த வழியூடே அவன் பின்பற் சென்றான்.

# அவதாரம்

**புதுமைப்பித்தன்**

**சிருஷ்டி எப்படி உண்டாகிறது?**

**மனத்தின் உணர்ச்சிக் கொந்தளிப்பினாலே?**

**"துடிக்குதென் உதடும் நாவும் சொல்லு சொல் என்றே இடிக்குது குறளி" என்பதைப் போல், பொங்கி வரும் உணர்ச்சியின் வெளியீட்டினாலா?**

**சிப்பிப் புழுவின் உடம்பில் பட்டு உறுத்தி உறுத்தி வேதனை எழுப்பும் மழைத்துளியைப்போல், மனசில் விழுந்து உறுத்தும் விஷக் கறையினாலா?**

**மனசில் கறையின் உறுத்தல் இருந்தாலன்றி சிருஷ்டி உண்டாகாதா? கதையைப் படியுங்கள்.**

பாளையங்கால் ஓரத்திலே, வயற் பரப்புக்கு வரம்பு கட்டியவை போன்ற பனைவிளைகளுக்கு அருகே குல மாணிக்கபுரம் எனச் சொல்லப்பட்ட குலவாணிகபுரம் இருக்கிறது. இந்தச் சிற்றூரில் யாதவர்களும் கொடிக்கால் 'வாணியர்' களுமே ஜாஸ்தி. மருந்துக்கு என்று வேளாண் குடிகளும் கிராமப் பரிவாரங்களான குடிமகன், வண்ணான், முதலிய பட்டினிப் பட்டாளங்களுக்கும் குறை கிடையாது, ஊரில் செயலுள்ளவர்கள், யாதவர்களே.

கிருஷ்ணக்கோனார் என்ற கிருஷ்ணசாமிதாஸ் யாதவர்களுக்குள் யோக்கியர் என்ற பெயர் வாங்கியவர். யோக்கியர் என்றால் அயோக்கியத் தன்மையில் இறங்காதவர் என்றே அர்த்தம். சந்தர்ப்ப வசதி இல்லாததினாலோ என்னவோ நல்லவராகவே பெயரெடுத்து வந்திருக்கிறார்.

ஆனால் விதி, உடம்பை வளைத்து வேலை செய்ய முடியாத வரை காத்திருந்துவிட்டு, அவருக்கு ஒரு குழந்தையை—ஆண் பிள்ளையை—மட்டும் கொடுத்து மனைவியை அகற்றி அவருடைய நடமாடும் சொத்துக்களான கால் நடைகளிடையே கோமாரியைப் பரப்பி விளையாடியது.

வெகு சீக்கிரத்தில் கஷ்டங்களை அறியலானார். சாப்பாட்டுக்கும் கஷ்டம் வந்தது. குழந்தையை வைத்துக்கொண்டு பராமரிப்பது தலைக்கட்டு நிர்வாகத்தை விடத் தோன்றியது கிழவனாருக்கு.

பையனுக்கு இசக்கிமுத்து எனப் பெயரிட்டு, இசக்கியின் அருள்விட்ட வழி என ஏக்கத்திலும், ஏமாற்றத்திலும் ஏற்படும் நிராதரவில் பிறக்கும் திருப்தியை பெற்றார்.

குழந்தையும் நாளொரு ஏமாற்றமும் பொழுதொரு கஷ்டமும் அனுபவித்து வளர்ந்து வந்தது. விதியின் கொடுமையைக் கண்டு சீற்றமடைந்தோ என்னவோ. இயற்கை அவனுக்குத் தன் பரிபூரண கிருபையை வருஷித்தது. உடலும் மனமும் வறுமையின் கூர்மையிலே தீட்சண்யப்பட்டு வளர்ந்தது.

இசக்கிமுத்துவைப் பார்த்தால், மனம் அவன் காலடியில் விழுந்து கெஞ்சும். ஆனால் அதே மனம் அவனுக்காக கண்ணீர் வடிக்கும். அவனது முகச் சோபை அப்படி. குழந்தையின் துடிவைக்கண்டு கோனார் அவனுக்கு 'நாலெழுத்து படிச்சுக்கொடுத்து உத்தியோகம் பார்க்கும்படி செய்விக்கவேணும்' என ஆசைப்பட்டு, திண்ணைப் பள்ளியில் சேர்த்துவிட்டார்.

புது விஷயங்களைக் கிரகிக்க இசக்கியிடம் இருந்த ஆவலுக்கு ஏற்றபடி திண்ணை வாத்தியாரின் அறிவுப் பொக்கிஷம் விசாலமாக இல்லை. அதன் விளைவாக கல்வியரங்கம் மாறியது.

கோனார் மறுபடியும் குழந்தையின் கையைப் பிடித்துக்கொண்டு பாளையங்கோட்டை சாமியார் பள்ளிக்கூடத்திற்குப் பிரயாணமானார், எம்மதத்தவரானாலும் துறவிகளாக வருகிறவர்களுக்கு நம்மவர் செலுத்தும் மரியாதை சிற்சில இடங்களில் தவறான மதிப்பும் அந்தஸ்தும் கொடுத்து விடுகிறது. இத்துடன் ஓரளவு தர்மச் செலவு செய்யும் சேவையும் சேர்ந்துகொண்டால் அந்தஸ்து வளர்ச்சிக்கு அளவே கிடையாது. ஏகாதிபத்தியத்திற்கே பிரத்யேகமான வர்ணம் என்ற வெள்ளைத் தோலும் சேர்ந்துகொண்டாலோ கேட்கவேண்டியதே இல்லை. இந்த மூன்று அந்தஸ்தும் கொண்ட பிறமத மிஷனரிப் பள்ளிக்கூடங்கள் தர்மம் செய்யும் ஏகாதிபத்தியமாக, ஏகாதிபத்தியம் செய்யும் தர்மஸ்தாபனமாக இரண்டு நோக்கங்களையும் கதம்பமாக்கி இரண்டையும் ஒருங்கே குலைத்து வருகிறது.

இப்படிப்பட்ட ஸ்தாபனம் ஒன்றின் ஸ்தல சர்வாதிகாரி அர்ச்ஞானானந்தச் சாமியார். இவர் ஸ்தல கிருஸ்துவர்களின் ஒரு வகுப்பாருக்கு மோட்சத்தில் இடம் போட்டுக்கொடுக்கும் வேலையுள்ள ஸ்தல ஹைஸ்கூலின் தலைமை நிர்வாகத்தை ஏற்று இங்கிலீஷும் சரித்திரமும் போதித்து வருகிறார்.

இவர் வசம் கோனார் தம் குழந்தையை ஒப்புக்கொடுத்தார். சாமியார் இலவசப் படிப்பும், அவன் வாழ்வுக்கு என்று மாசம் நான்கு ரூபாய் சம்பாவனையும் கொடுப்பதாக வாக்களித்ததில் கோனாருக்கு மகிழ்ச்சிகங்கு கரையில்லாமல் பிறந்தது. ''பிள்ளையை எப்படியும் நாலெழுத்து வரும்படி செய்விக்கவேண்டும்'' எனக் காலில் விழுந்து கும்பிட்டுவிட்டு வீடுவந்து சேர்ந்தார்.

குழந்தையும் சோற்று மூட்டையுடன் புஸ்தகச் சுமையை யும் தாங்கி பாளையங்கால் கரை மேலாக கல்வி யாத்திரை செய்துவந்தான். படிப்பு ஏழாவது வரை வந்தது.

பையனுக்கும் சாமியாருக்கும் திடீர்ப் புயலாக லடாய் ஏற்பட்டு கிழவரின் நிதானத்தைக் குலைத்தது. இந்தக் காலமும் சாமியார் செய்த பிறமதப் பிரசாரத் தைப்பிரமாதமாகப் பொருட்படுத்தவில்லை. கிருஸ்துவின் பரித்தியாகம் இவன் மனசைச் சிறிது கவர்ந்தது என்றா லும் கிருஸ்து முனியின் தத்துவம் பூண்டிருந்தும், அமல் மிகுந்த சேவை அவனுக்கு அவரது தத்துவத்தின் மேல் வெறுப்பையே ஊட்டியது மேலும் புண்ணைக் காட்டி பிச்சை வாங்குவதற்கும் கிருஸ்துவின் புண்கள் வழியாக அவர்களும் மோக்ஷ சாம்ராஜ்யத்தை நம்பும்படி தன் வயிற் றுப் பசியை உபயோகிப்பதற்கும் பிரமாத வித்தியசாம் ஒன்றுமில்லை என்றே இவன் நினைத்து வந்தான், அதனால் அவன் இந்தமுயற்சிகளைச் சட்டை செய்யவில்லை. ஆனால் இது மட்டும் இந்த மதஸ்தாபனத்தில் இல்லை. ஈராயிர வருஷங்களாக மதப்பிரசாரமும் செய்து பழுத்து மூதிர்ந்து போன ஒரு ஸ்தாபனத்தின் ஒரு லட்சியமோ கொள் கையோ இல்லாதவர்களும், அல்லது லட்சியத்திலோ கொள்கையிலோ நம்பிக்கையில்லாதவர்களும் பிரமச்சரிய விரதத்தை அனுஷ்டிக்க முயலுவதும், அனுஷ்டிக்கும்படி கட்டாயப்படுத்தப்படுவதும் ரொம்ப அபாயகரமான விஷயம், தீயுடன் விளையாடுவதாகும். இது மன விகாரங்களில் புகுத்தும் சுழிப்புக்கள் அந்த மனிதனுக்கு ஆபத்தை விளைவிப்பதுடன் நின்றுவிடாமல் ஸ்தாபன பலத்திற்கே உலைவைத்து விடுகின்றன.

இசக்கிமுத்துக்கு ஏழாவது வகுப்பில் ஏற்பட்ட உபாத் தியாயர் அர்ச்பெர்னான்ட்ஸ் சாமியார் விபரீத ஆசையைக் கொண்டவர். பையனுடைய அழகு அவருடைய நேர்மையற்ற காம விகாரத்திற்கு இலக் காகியது. பையன் திடுக்கிட்டான். தலைமைச் சாமியா

ரிடம் ஓடித் தெரிவித்தும் நிவாரணமோ ஆறுதலோ கிடைக்க வழியில்லாமல்போக, சிறு குழந்தைத் தனத்தில் அனுபவ சாத்தியமற்ற முறைகளைக் கையாண்டு பள்ளிக் கூடத்திலிருந்து விரட்டப்பட்டான்.

தகப்பனுக்கும் மகனுக்கும். இருவரும் அன்னியோன் னியப் பரிவுகள் நடந்துகொள்ள வசதியளிக்கும் நிர்க்கதி யான நிலைமையிலிருந்தும் மனம் ஒன்றாமல், அந்தஸ்து கொடுத்து வாங்கும் தூரத்தைக் குறைக்காமலே நடந்து வந்ததால், பள்ளிக்கு முழுக்கு போட ஏற்பட்ட காரணத் தைக் கூற என்னால் முடியவில்லை. 'மதம் மாறச் சொன்னார்' முடியாது என்றதால் விரட்டப்பட்டதாக அறிவித்துவிட்டான். தெய்வமாகப் பாவித்து வந்த சாமியாரின் ஆசையைப் பூர்த்திசெய்துவிட்டால்தான் என்ன எந்த மதத்து மோட்சமானால் என்ன என்றே கிழவருக்குப்பட்டது. மேலும் ஹிந்து தர்மம், தாழ்ந்த வகுப்புக்கள் 'பொட்டுக்கட்டி' தன் விசேஷ பரிவைக் காட்டிவரும் சில வகுப்பின் ஆசாரங்கள் மாமிச உணவை விலக்கி வைக்காதிருப்பதால், இவ்வகுப்புக்களிலிருந்து பிற மதங்களுக்குப் போகிறவர்களுக்கும் அவர்களுக்கு மிடையில் தொடர்பு அவ்வளவாக அறுந்துவிடுவதில்லை. அதனால் கோனாருக்குப் பையன் செய்தவேலை பிடிக்கவு மில்லை; புரியவுமில்லை. இருந்தாலும் அவனைக் கண்டிக்க விலலை. வேறு பள்ளியில் சேர்க்க முயலவுமில்லை.

இந்த நிலையிலே இசக்கிமுத்தின் மனவுலகத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. அதாவது அவன் தன்னை அறிந்து கொண்டான். ஒரு நாள் ஏனோ தானோ என்று வில்லுப் பாட்டின் ஆவேசத்திற்கு இணங்க அவன் கக்கிய வார்த் தைகள் இத்தனை நாட்களாக ஊமைக் கவிஞனாக அனுபவித்து வந்த இன்பங்களை எல்லாம் இசையில் கொட்டினான். சில சமயங்களில் பிரமிக்கும் இசைக் கனவுகளை எழுப்பியது; ஆனால் பல வார்த்தைப் படாடோப இடிமுழக்கங்கள், கனவைச் சிதைக்கும்

கரகரப்புகளுடன் பிறந்தன வென்றாலும் பொதுவாக, முறையாகத் தமிழ் படிப்பது என்ற சம்பிரதாயத்தால் ருசி கெட்டுப்போகாததினால் பாட்டில் உண்மையும் தெளிவும் தொனித்தது. ஆனால் புராதனச் செல்வங்களில் தொடர்பும் பரிச்சயமும் இல்லாததினால் நெஞ்சுக்கொடியைத் தோளில் தூக்கிப்போட்டுக்கொண்டு பிறந்தவுடன் தெருவழியாக கோஷமிட்டுக்கொண்டு ஓடும் குழந்தையின் அசாதாரணத் தன்மையைப் பெற்றிருந்தது ஆனால் இசக்கிமுத்தின் பாட்டு, இசக்கிமுத்தின் 'வெளிவராத ரகசியமாக' இருந்து வந்தது.

இப்படியாக மனக்கனவுகளைப் பாடுவதும் கிறுக்குவதும் கிழிப்பதுமாகக் காலங்கழித்தான் இசக்கிமுத்து.

# 2

ரூபமற்ற, நாமமற்ற, அனாதியான, பொருளற்ற, பொருளுக்கு அப்பாற்பட்ட அந்த வஸ்து அதாவது, வஸ்து என்ற வரம்புக்கு மீறியதும். வரம்பே இடிந்தது மான ஏதோ ஒன்று என்ற ஒன்றல்லாத, பலவும் அல்லாத அந்த 'அது' சிந்திக்க ஆரம்பித்தது; தன்னை உணர ஆரம்பித்தது; தன்னை உணர்ந்து தன்னையே உணரவும் அஞ்ச ஆரம்பித்தது. பூர்த்தியாகாத ஆசைவித்துக்கள் மாதிரி கொடுமையின் குரூரத்தின் தன்மைகள் தன் சித்த சாகரத்தின் அடியில் அமுங்கியும் குமிழிவிட்டு. பிரபஞ்சம் என்ற தன்னையே கண்டு அஞ்சியது. தன்னையே நோக்கியது. தானான மனிதர்கள் தன்னுள் ஆன மனிதர்கள், தன்னைக் கையெடுத்து வணங்கி தன்மீதே இலட்சியங்களைச் சுமத்தி, நன்மை நலம் மோட்சம் என்ற கோவில்களைக் கட்டுவது கண்டு கண்ணீர்விட்டது. அவர்கள் நம்புவதுதான் அல்ல என்று அவர்களிடம் அறிவிக்க விரும்பியது, துடிதுடித்தது.

# 3

கிருஷ்ணக்கோனார் அந்திமதசை யென்னும் அஸ்த மனக்கிரணங்கள் தன்மீது விழுவதைக் கண்டுவிட்டார். அர்த்தமற்ற புதிராக இருந்துவரும் பெரிய மாறுதலின் காலம் அணுகுவதை உணர்ந்துவிட்டார். இனி எப் படியோ? இதுவரை நடந்துவந்த வாழ்வுப்பாதை பிறப்பு என்ற சித்தவான் வளையத்தைத் தொடும் அந்த மங்கிய எல்லையிலிருந்து அன்றுவரை ஏற்பட்ட மாற்றங்கள், கொந்தளிப்புக்கள், சுழல்கள் எல்லாவற்றையும் சமநோக்குடன் பார்க்கும் அப்பொழுது ஆட்டிய அதிர்ச் சிகள் அற்றுநோக்கும் தன்மையைப் பெற்றார். இன்னும் ஒரு ஆசைமட்டும் பூர்த்தியாகவில்லை.

அவனுக்குக் கலியாணத்தைச் செய்துவிட்டால், தன் கடமை பரிபூரணமாக நிறைவேறியதாகவே அவர் தீர்மானித்தார்.

லெட்சுமி என்ற பெண் இசக்கிமுத்துக்கு உடலதிர்ச்சி களில் இருக்கும் இன்பத்தைக் காட்ட அவ்வூர்ப் பெரியோர் களால் ஆசீர்வதிக்கப்பட்டாள். புதுக்குடித்தனம் என்னும் பதினெட்டாம் பெருக்கு களிபுரண்டு கொந்தளித் துச் சுழித்து ஓடியது மணக்கனவுகள் என்ற தெப்பம் இசக்கி முத்துக்கு நிலை தடுமாறி குதித்து முழங்கிச் சென்றது. கனவுகள் புதுவடிவம், நிஜவடிவம் பெற்றன. அவன் பாட்டை எழுதுவதை நிறுத்திவிட்டான். நேரில் நிறைவுபெற்ற மனம் பாட்டில் துள்ளிப் பொங்கவில்லை. அவன் கனவுகள் நாதவடிவம் பெறாமல் நாள் மணிக் கணக்கில் நிஜ 'தரிசனத்தில்' ஒடுங்கியது.

# 4

எல்லாம் தானாகவும், தன்னில் வேறாகவும் வேறு என்ற பேதமற்றும் இருக்கும். அது தன் தொழிலில், தன் நியதியில், தன் இயற்கைத் தன்மையில் சந்தேகம் கொண்டது. பயம் கொண்டது. தன் தொழிலை தானே நிறுத்த இயலாமல் தவித்தது. தனக்குத் தன் தொழில் தெரியவில்லை எனக் குமைந்தது. சிருஷ்டித் தொழில் கலையின் நியதியை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும் என்பதைக் கண்டது தான் நிலையாமல் தன் பூர்த்தியாகா ஆசைகள் தன் தொழிலில் விழுவது கண்டு தனக்குத் தன் பயிற்சியில்லை, கலையில்லை அதாவது சிருஷ்டித் தன்மைக்குத் தான் லாயக்கில்லை என நினைத்தது.

வருஷம் முழுவதும் பதினெட்டாம் பெருக்காக இருக்க முடியுமா? வெவ்வேறு நிலையில் உள்ள உணர்ச்சி, பிரவாகம்போல ஒன்றையொன்று மோதி பொதுநிலை யடையும் வரை கொந்தளிப்பும் சுழற்சியும் இருக்கும். நிலைமை சமப்பட்டவுடன் வேகம் குறையாது போனா லும் மேலுக்குத் தெரியாமல் இருக்கும். இசக்கிமுத்தின் மனத்துடிப்பு இந்த நிலையை அடைந்ததின் பயனாக, அதன் நிதானத்தைத் தப்பிதமாகக் கருதும்படி லெட்சுமிக்கு மனப் பண்பு இருந்ததால், அவனுக்குத் தப்பிதம் செய்து விட்டாள். நிதானப்போக்கை அசட்டை என்று நினைத் ததின் விளைவாக சந்தர்ப்ப விசேஷத்திற்கிணங்க விபரீதம் விளைந்துவிட்டது. விளைந்ததும் இசக்கிமுத்துக்குத் தெரிந்தது.

நாதப்பிசகு ஏற்படாமல் ஒலிக்கும்படி செய்துவந்த அவனது மனவீணையின் நரம்புகள் அறுந்து தொங்கும் படி உணர்ச்சி வாசித்து விளையாடிவிட்டன். உன்மத்தன் ஆனான். பூர்வஜன்மம் என்ற வசதி இருக்கிறதோ

என்னவோ மனித ஜீவனுக்கு உள்ள விசேஷ வசதிகளை யும் சக்திகளையும் நம்மால் அறிய முடியாது.

இசக்கிமுத்து அவளை மன்னிக்கும் மனப்பண்பு படைத்திருந்தான்; நபும்சகத்தால் விளையும் சகிப்புத் தன்மையல்ல; பரிபூரண மன்னிப்பு ஆனால் மனம் அறுந்து தொங்கியது. கொழுந்து விடாவிட்டாலும் கங்கு அவியவில்லை. சில சமயம் சித்தம் அளந்து கட்ட முடியாத விபரீத அளவுக்கு மனம் பேயுருக் கொண்டு குமுறியது. தன்னையே தின்று தணிந்தது.

மனசின் குதியாட்டத்தைக் கண்டு அஞ்சிய இசக்கி முத்து அதன் கடிவாளம் தன் கைக்குச் சிக்கும்படி பண் படுத்த லயக்குறைவு இல்லாததால் இசை எழுப்ப விரும் பினான். பாட்டு உண்மையில் துடிதுடிப்புடன் பொங்கி யது. வார்ப்பில் பரிபூரண அழகு முன்போல அனாயாச மாக விழவில்லை. கற்பனையில் கைப்பு தட்டியது. கனவை ஏமாற்றம் ஏந்தி நின்றது.

நிராகரித்தான்.

கலைவாணியின் வழி சிருஷ்டியின் வழி என்பதை உணர்ந்து அறிந்தவன்; அறிந்து உணர முயன்றவன் அல்ல. மனப்பண்புதான் கவிதையின் மார்க்கம் எனக் கண்டான். மனிதனுடைய பரிபூரண லட்சியமான தெய்வக் கனவில் மனசை லயிக்கவிட்டால்தான் பாட்டில் பண்பு பிறக்கும் என நினைத்தான்.

லட்சுமியை விட்டுப் புறப்பட்டான். சமூகத்தை மறந்து வெளிப்பட்டான்.

மன லட்சியத்தின் பூத உருவமான ஹிமயத்தை நோக்கினான்.

நடந்தான்.

# 5

அந்த அது மனித உருவம்கொண்டு, மனிதன் நினைக்கும் தான், தானல்ல என மனிதனிடம் பறை யடித்து அறிவித்து, தன் சுமையை இறக்கிக்கொள்ள விரும்பியது.

மனித உருக்கொண்டது.

தாடியும் மீசையும் நரைத்துப் பழுத்த கிழவனாராக உருவெடுத்தது.

ஹிமயத்தில் காலடி வைத்தது.

நடந்தது.

ரூபத்திலே தெளிவு இருப்பதை உணர்ந்தது. தன்மீது சுமை இல்லையோ எனக்கூட சந்தேகித்தது. ஆனால் பொறுப்பை மறந்துவிடவில்லை. ஏனென்றால் அதனால் அதை மறக்க முடியவில்லை.

நடந்தது......

நடந்து வந்தது.

இசக்கிமுத்தும் நடந்து வருகிறான். அவன் முகத்தை தாடியும் சிகையும் மறைத்தது. ஆனால் மனக்கொதிப்பின் புகை மண்டலம்போல் முகத்தைச் சுற்றிச் சிதறிப் பறந்தது.

# 6

இருவரும் சந்தித்தனர்.

அது அவனைச் சந்தித்தது;

அவன் அதைச் சந்தித்தான்.

''நான், நானில்லை'' என்றது அது.

''நான், நானில்லை'' என்றான் அவன்.

''யோகத்தில் அமருவோம்'' என்றான் அவன்.

இருவராக அமர்ந்தனர்: ஒருவராக இருந்தனர்.

அது அவனில் தன்னைக் கண்டது.

அவன் அதில் தன்னைக் கண்டான்.

# ஒரே முத்தம்!

**புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்**

கோடை நாளின் மின்னல்போல் அவள் நெஞ்சில் புதியதோர் எண்ணம் தோன்றிற்று. இடதுகைக் கடிவாளத்தை அசைத்தாள். குதிரை செங்குன்று நோக்கிப் பறந்தது. தோழிகளும் தம் குதிரைகளை அதே பாதை நோக்கித் துரத்தினார்கள்.

செல்வியும் தோழிமாரும் செங்குன்றை யடுத்துள்ள கண்ணிச் சோலையை அடைந்தார்கள். தமது குதிரை களை நாவல் மரம் ஒன்றில் கட்டினார்கள். அழகாய் அமைந்த அச்சோலையில் நுழைந்தார்கள், மருளும் பார்வையுடைய மான்கள்போல,

உடுக்கள் நிரம்பிய நீலவானம்போல் பச்சைத் தழை கள் அளாவிய மரங்களில் மலர்கள் குலுங்கின. எங்கணும் கொடிப் பூக்கள், புதர்ப்பூக்கள் தரையில் அழகு கொழித்தன, பூஞ்செடிகளின் கால்களை நோக்கி மடை தோலிவிட்ட தண்ணீர் சாரை சாரையாய் ஓடிக்கொண்டி ருந்தது. அமைதியில் ஊடுருவிப் பாய்ந்தது பறவைகளின் இன்னிசை. புதுப்பெண்கள் போல் ஒரு சாயலாக மயில் கள் ஒதுங்கி ஒதுங்கி நடந்தன.

இவை செல்வியின் உள்ளத்தைக் கவர்ந்தன. கவிதைக்குரிய அழகின் கூட்டத்தை அவளால் அளவிட முடிய வில்லை. அவள் பேசுவாள், ஆயினும் ஊமையானாள். செக்கச் செவேலென்று பூத்திருந்த செங்காந்தள் மலர்களையும், அவைகளை அடுத்து உயரத்தில் தொங்கும் பொன்னிறமான சரக்கொன்றை மலர்களையும் தோழிகள் கண்டார்கள். அக்காட்சி 'இரப்பவர் இல்லை ஒன்று ஏந்திய கைகளில் கொடையாளிகள் பொற்காசுகளைச் சொரிவதாகும்' என்ற கவிதை செய்து கொண்டிருந்தார்கள். அச்சமயம் புள்ளிமான் ஒன்று வேறொரு பக்கத்தில் செல்வியை அழைத்துக்கொண்டு போயிற்று.

கதிரவன் மேற்றிசையைத் தழுவும் நேரம் ஒரு பக்கம் பிரிந்துசென்ற செல்வி, சிறிது சோர்வால் அங்கிருந்த பளிங்கு மேடை ஒன்றில் அமர்ந்தாள். அவளுடைய நீலவிழிகள் உலவிய இடத்தில் காதல் விளைக்கும் ஆண் மயிலும் பெண் மயிலும் ஒன்றை ஒன்று கண்ணாற் சுவைத்தபடி இருந்தன, அந்தக் காதல் வெள்ளம் இரண்டிற்கும் நடுவில் ஒரு விரற்கடைத் தூரந்தான் பாக்கி,

செல்வி தன் பார்வையைத் திடீரென்று மறுபுறம் திருப்பினாள். அவளுடைய 'தன்னந் தனிமை'யை அவளுக்கு நினைவை உண்டாக்கின, இணை மயில்கள் அவளுடைய இளமையின் இயற்கை அவளைக் கண்ணீர் விட வைத்தது, அவள் எழுந்தாள், தோழிமாரைத் தேடி நடந்தாள்.

மற்றொருபுறம் செங்குன்றூர் இளவரசர் மெருகேற்றிய கருங்கல்மேடை ஒன்றில் தூங்கிக்கொண்டிருந்தான். ஆயினும் அவனுடைய இளமையும், அழகும், ஒளியும் மாத்திரம் தூங்காமல் தம்மை நாடிவரும் உயிருக்கு மற்றோர் உயிரை அளிக்கக் காத்திருந்தன.

அவள் அவனைப் பார்த்தாள்; அவனுடைய கெண்டை விழிகள் ஆடாமல் அசையாமல் இருந்தன. அவள் இவ்வுலகை மறந்தாள்.

அவனது சிகை புறக்கழுத்தளவு கத்தரித்து விடப்பட்டிருந்தது. கதிர்விடும் விரிந்த நெற்றியில் மேலேறிய கறும்புருவம் ஒளி வீசிக் கிடந்தது. அவனுடைய இரண்டு உதடுகளின் கடைக் கூட்டில் உயிர்க்களை பின்னிக் கொண்டிருந்தது. அவனுடைய மார்பும், மார்பிற்கிடந்து ஒளி செய்யும் நவமணிப் பதக்கங்களும் உதயகிரியும் இளம்பரிதியுமாக விளங்கின.

அவள் கண்களில் புதியதோர் ஒளி உண்டாயிற்று. அவள் முகமண்டலம் நிறைய வியப்பு! நெஞ்சில் காதற் பெருக்கு! அவன் அழகு நிலவையும். கதிரையும் மின்னையும், பொன்னையும் கொண்டு வல்லமை ஆக்கிய சித்திரமோ என்று ஐயப்பட்டாள், அந்த ஆண்மையின் வடிவில் அறியப்படும் மற்றொரு வீர வடிவம், கேடயத் தோழ் வைக்கப்பட்டிருக்கும் நீண்ட வாளாயுதம் என்று உவமித்தாள்.

அவன் தோற்றம் அவளை உயர்நிலையிற் சேர்த்தது. கண்ட மாத்திரத்தில் அளவற்ற இன்பத்தை உண்டாக்கும் அவனுடைய திருவுருவமானது. கேட்ட மாத்திரத்தில் இன்பம் விளைக்கும் செந்தமிழ்க்குச் சமம்.

அவன் திடுக்கிட்டெழுந்தான். அவள் திகைத்தாள்.

இருவர் பார்வையும், இருவர் மனமும் அமைதி பெற்ற பின் அதிசயத்தோடு நீ யார் தனியாக என்று கேட்டான் 'நான் கொற்றவேல் மன்னன் மகள். என் பெயர் செல்வி' என்று கூறினாள். அவள் கொஞ்சம் நாணத்தால் உடை ஒதுக்கித் தலை குனிந்திருந்தாளாயினும், அந்தக் கட்டழகனின் நல்ல பதிலை எதிர்பார்த்

தாளாதலால் சற்று நிமிர்ந்து புன்சிரிப்புடன் அவனுடைய முகத்தை மற்றொரு முறை பார்த்தாள். அவனும் அவள் முகத்திற் சிந்தும் அழகைத் தன் பார்வையால் ஏந்தினான்.

அவள் வாடை யுயர்ந்த மங்கை! மிதமிஞ்சிய பருமனில்லாத மின்னற் சுரம்பொன்ற மேனியுடையவள்' மெல்லிய கருங்குழலின் பின்னல், பின்னால் நீண்டு தொங்கிற்று கருநாகம்போல்! நிலவுபோல் வெண்ணிறத்தையும், நிழல்போல் மேன்மையையும் உடைய அவளது ஆடையான்து மேனியின் ஒளியை மறைத்துவிட முடியவில்லை. பிறைபோன்ற நெற்றி, கருவிழி, செவ்விதழ், முல்லைப்பல் ஆகிய இவைகள், வேண்டுமென்று சிரிப்பதன்றி இயற்கையாக நகைப்பைக் கொட்டிக் கொண்டிருந்தன.

ஆயினும் அவன் 'அவள் பகை அரசனின் மகள்' என்பதை எண்ணினான். தன் நெஞ்சையும் உயிரையும் அளாவிய அந்த அழகை வலிய வெளியே இழுத்துப் போட்டான்? வாய் நிறைந்த அமுதத்தை வேண்டுமென்றே கீழே உகுத்தான்; உடல் சிலிர்க்க வந்த தென்றலை விட்டு வெதுப்பும் அறையில் குடிபோக முன்றான். அந்த அழகின் ஒளி புக வேண்டாம் என்று தன் கண்ணை இமையாமல் மூடினான். அவள் வாய் மலரின் செந்தமிழ்த்தேன் வந்து பாயாமல் தன் காதுக்குத் தாழிட்டான்.

என்னை நீங்கள் ஒப்புகிறீர்களா?—என்று அவள் ஆற்ற முடியாத காதல் தூண்டக் கேட்டாள்.

செல்வியே, ஒன்றை ஒன்று தழுவும் நமது இரண்டு உள்ளத்தை, நம்மிரு நாட்டின் பழம் பகையானது பிரிக்கிறது. என் அன்னை நாட்டில் ஒருத்தி யிருக்கிறாள். அவள் உன்னினும் அழகுடையவள் அல்ல எனினும் அவள் என் பகையரசனின் மகளல்ல...என்று கூறி மறுத்தான்.

இதைக் கேட்ட செல்வி உள்ளந் துடித்தாள். பகை யுள்ளத்தைத் தாண்டி அவனுடைய அன்பைத் தன்னிடம் ஓடிவரும்படி செய்ய அவளால் முடியாமற் போயிற்று.

'என் உள்ளத்தில் குடிபுகுந்தவரின் பெயர் என்ன? அதையாவது கூறலாமா?' என்று பரிதாபமாகக் கேட்டாள். இளவரசன் தன் பெயரைச் சொன்னான் 'வேல் மறவன்' என்று.

உள்ளம் ஒடிந்த செல்வி தன் உயிரைச் சுமந்து கொண்டு தள்ளாடி நடந்தாள். செல்வி தன் தோழிமாருடன் தன் மாளிகை சென்றாள். அவனையே நினைத்திருந்தாள் மணித்துளிதோறும். ஒரு நாள் போவது அவளுக்கு ஓர் யுகம் போவதாயிருந்தது. இவ்வாறு கழிந்த நாட்கள் அவள் கணக்குபடி வருடங்கள் ஆயின. வேல்மறவன் தாய் நாடாகிய செங்குன்றூருக்கும் செல்வியின் தாயகமாகிய கேணிச்சுரையூருக்கும் சண்டை மூண்டது.

கேணிச்சுரையூரின் கோட்டை வாசலைக்கடந்து எதிர்ப்படை அரசமாளிகையை முற்றுகையிட்டு விட்டது. கேணிச்சுரையூரின் காக்கைக் கொடி பிடிபடும் என்று இரு பக்கத்தாறும் உறுதியாக்கலானார்கள். கேணிச் சுரையூரின்

கவிஞர்கள் தமது தாய்நாட்டின் பெருமையைக்காக்க அந்நாட்டு இளைஞருக்கு எழுச்சியை — உணர்ச்சியைத் தூண்டினார்கள். ஆனால் அந்த நாட்டுப் பெண்கள் போரிற் கலந்துகொள்ளக் கூடாது என்பது அந்நாட்டின் சட்டமாதலால் பெண்களின் எழுச்சி அடைந்த தோள்கள் அடக்கப்பட்டன. கேணிச் சுரையூரில் வயதுவந்த இளைஞர் அனைவரும் போர்க்கோலம் பூண்டார்கள். இனந் தெரியாத இளைஞன் ஒருவன் கேணிச் சுரையூரின் படைக்குத் தலைமை தாங்கலானான்.

அரசமாளிகையை முற்றுகை யிட்டிருந்த செங்குன்றூர்ப் படையில் இனந்தெரியாத அந்தச் சிங்க இளைஞன் சிறுபடை ஒன்றுடன் புகுந்தான்! செங்குன்றூர்ப் படை சிதறி ஓடிற்று! அது கோட்டை வாசலுக்கு வெகு தூரத்தில் அமைந்திருந்த தன் கூடாரத்தை நோக்கிப் பறந்தது.

கேணிச் சுரையூர் அரசன் மகிழ்ந்து, கூடாரத்தை நோக்கி ஓடிய எதிரிகட்குப் பெண்ணுடைகளைக் கழுதை மேல் அனுப்பினான். கோட்டை வாசல் கடந்து உள் நுழைந்த பகைவர் திருப்பியடிக்கப்பட்டால் அவர்கள் எதிரிகளால் தரப்படும் பெண்ணுடைகளை அணிந்துதான் மீண்டும் போர் செய்யவேண்டும் என்பது இரு நாட்டைப் பொறுத்த கட்டளை.

செங்குன்றூர்ப் படைக்குத் தலைமை வகித்திருந்த வேல் மறவன் கழுதை தூக்கிவந்த பெண்ணுடைகளை வெட்கத்தோடு உடுத்துக் கொண்டான்.

மீண்டும் போர்க்களத்தில் இரு பக்கத்துப் போர் முரசுகளும் போரை ஆரம்பித்தன. உறவென்பதில்லை. நண்

பென்பதில்லை. தம் தம் தாய்நாட்டின் வெற்றி ஒன்றே குறியாகக் கொண்டு போர் செய்தார்கள். தலைகள் பனங்குலை சரிவது போல் சரிந்தன. போர் வீரர்கள் ஒருவர்க்கொருவர் விழுக்காடு நின்று வாட்போர் நடத்தினார்கள்.

இனந் தெரியாத அந்தப் படை வீரனை நோக்கி 'அதோ நாணத்தால் முகம் மறையும்படி பெண்ணுடையால் மூடி நிற்கும் அந்த வீரன் தான் பகைப் படைக்குத் தலைவன்' என்று கூறினான் ஒரு வேவுகாரன். இனந் தெரியாத அப்படைத் தலைவன் அவன் மேற் பாய்ந்தான்! இரு தலைவர்க்கும் வாட்போர் மூண்டது. விரைந்து சுழலும் இரு வாள்களும் மின்னல் ஒளியை உண்டாக்கின. போர்க் கலையின் நுட்பத்தை, மற்ற வீரர்கள் உற்றுக் கவனிக்கலானார்கள், தம் தம் போர்த் தொழிலையும் மறந்து அவர்கள் தம் தலைவர்களின் வெற்றி தோல்வியை எதிர் பார்ப்பதையும் மறந்துபோனார்கள், போர்த் திறமை வெகுநேரம் நீடிப்பதால் கலை நுட்பம் தமக்குப் புரியும் என்று நினைத்தார்கள்.

முடிவில்,

வாட்போர் செய்திருந்த அந்த இருதலைவர்களின் இரு மார்பிலும் ஒத்தகாலத்தில் இரண்டு வாள் முனைகள் நுழைந்து வெளி வந்தன. அதனால் இருவர் தோள்களும் தாழ்ந்தன. இரு மார்புகள் குருதியை உகுத்தன. கடை சாய்ந்து விழும் இரு தேர்கள்போல் இரு தலைவரும் ஒரு முகமாகச் சாய்ந்தனர். இருவர் உடைகளும் இடம்விட்டு நகர்ந்தன. இருவர் கண்களும் சந்தித்தன. கழுத்தளவு கத்தரித்து விட்ட சிகை. மேலேறிய நாகம்போன்ற பின்னல்!

என் அன்பே என்று பதைத்தது வீரன் உடல்! என் அன்பே என்று அதிர்ந்தது செல்வியின் மலர் உடல். இருவர் தோள்களும் தழுவின காதற் பதைப்பால்! போகும் உயிர்கள் பிடித்து நிறுத்தப்பட்டன சிறிதுநேரம்.

குருதி சிந்திய போர் நிலத்தில்—அந்த மலர் மஞ்சத்தில்—ஒரே நேரத்தில்—ஒரே கணத்தில் இரண்டு காரியங்கள் நிகழ்ந்தன.

அவை ஒரே ஒரு காதல் முத்தம், இரண்டு மரணம்!



# பிற வெளியீடுகள்

- ❑ சுதந்திரப் போராட்ட வரலாறு
  *ஏ.என். சிவராமன்*
- ❑ முருகன் அருள் செல்வம் (600 பக்கங்கள்)
- ❑ சிறுவர் – சிறுமியருக்கு நீதிக் கதைகள்
- ❑ மாணவர் – மாணவியருக்கு நீதிக்கதைகள்
- ❑ புதுமைப்பித்தன் உதிர்த்த முத்துக்கள்
- ❑ பாரதிதாசன் உதிர்த்த முத்துக்கள்
- ❑ முல்லை கதைகள் (1945 – ல் 'முல்லை' இதழ்களில் வெளிவந்த கதைகள்)
- ❑ காணக் கிடைக்காத கடிதங்கள்
- ❑ தமிழ் இசை முழக்கம்
- ❑ வியாபாரத்தில் வெற்றி பெறுவது எப்படி?